


| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௯, ஆனி | பரல் |
| --- | --- | --- |
| ௩௨ | ஜூலை, 1958 | ௧௧ |

## மருத்துவமாமணி டாக்டர்

# எம். ஆர். குருசாமி முதலியாரவர்களின் மறைவு

திரு முதலியாரவர்களின் மறைவால் ஏற்பட்டுள்ள பல துறை இழப்பு எக்காலத்தும் எவராலும் ஈடுசெய்யவொண்ணாத மிக்க பேரிழப்பாகும். முதலியாரவர்கள் 1958 ஜூன் 26-ஆம் நாள் வியாழக்கிழமை இரவு 8-30 மணிக்குக் கீழ்ப்பாக்கத்துள்ள அழகிய தம் வளமனையில் ஆவிநீத்து இறைவன் திருவடிநீழல் எய்தினர். இவர்கட்கு ஒரு திங்களாகச் சிறிது உடல்நலமில்லாமலிருந்தது. வியாழக்கிழமை காலையிற்றான் கண்டார்க்குச் சிறிது கவலைதரும் நிலையினை அஃது எய்திற்று. இரவில் நல்ல நினைவுடன் திருப்பழனிச்செவ்வேளின் திருவடியைப் போற்றிக் கொண்டிருக்கும் நிலையிலேயே ஆவி நீங்கிற்று. இந்நாள் இவர்தம் அகவை எழுபத்தெட்டாகும். இவர்கட்குப் பெண்மக்கள் நால்வரும் ஆண்மக்கள் இருவரும் உளர்.

### பிறப்பு

திரு. முதலியாரவர்கள் 1880-ஆம் ஆண்டு பங்களூர்க்கு அண்மையிலுள்ள ஓர் அழகிய சிற்றூரில் திருமுருகன் திருவருளால் தோன்றினர். பிற்காலத்து எய்தக்கூடிய சிறப்புக்கள் அனைத்திற்கும் வித்தாக எல்லாராலும் விழைதக்க பண்புநிறை கொள்கலமாம் அன்புருவாகத் திகழ்ந்தனர். அதனைக்கண்டு பெற்றாரும் உற்றாரும், மற்றாருமாகிய அனைவர்களும் பெரிது

பாராட்டி வாழ்த்தினர். பிள்ளையும் இறையருளால் நிறைகுணத் துடன் பிறைமதிபோல் வளர்ந்து வந்தது.

படிப்பு

"ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி, வேடம் படிகத்"தளாகிய கலைமகளின் திருவருளால் திண்ணைப்படிப்பும், பள்ளிப்படிப்பும் முறையானே விரைவிற்கற்று நிறைவெய்தினர். பல்கலைக் கழக நுழைவுத் தேர்வாகிய (Matriculation) முதற் பெரும் படிப்பில் முதல்வகுப்பாகத் தேறினர். பின்பு பங்களூர் "செண்டிரல் கல்லூரியில்" 1902-ஆம் ஆண்டில் கலைப்புலமைப் பட்டம் பெற்றுச் சிறந்தனர்.

மைசூர் அரசினர் வழங்கிய பள்ளி உதவிப்படி பெற்றுச் சென்னை மருத்துவக்கல்லூரியில் சேர்ந்து திருத்தமுறக் கற்றனர். கற்று எம். பி. வி. எம். என்னும் பட்டம் எய்தினர். அறுவை மருத்துவத்தில் ஈடும் எடுப்பும் இல்லாப் பீடுடைய மேதையாக விளங்கினர். அந் நிலையினை எய்துவார்க்கு அளிக்கப்படும் "சிப்பர்பீல்டு" என்னும் தங்கப்பதக்கமும் பெற்றார்.

உழைப்பு

மைசூர் அரசினரால் கொள்ளைநோய் (Plague) நீக்கத் துறையின் முதல்வராக அமர்த்தப்பட்டார் அவ் வேலையினைச் செவ்வனே யாற்றிப் பேரும் பீடும் பெருகப்பெற்றார்.

1910-ஆம் ஆண்டில் சென்னை மருத்துவ ஊழியத்தில் சேர்ந்து மாண்புற்றார். இவ் வூழியத்திற்கு ஆள் தெரிந் தெடுக்கும் போட்டித் தேர்வில் முதன்மையாகத் தேறினர். பின் "டோராடூனில் ரேடியோலசியில்" சிறப்புப்பயிற்சி பெற் றனர். பெற்றுவந்தபின் தஞ்சை—மிராசுதார்களின் மருத்துவப் பள்ளியில் ஐந்து ஆண்டுகள் விரிவுரையாளராகப் பலரும் விழையும் பண்புடன் நலமுற வேலைபார்த்தனர்.

1915-ஆம் ஆண்டில் சென்னை முதன்மை மருத்துவ நிலையத்தில் கர்னல் எல்லிசின் உதவியாளராக மாற்றப்பட்டார். சிலநாட்கள் சிறப்புறப் பணியாற்றினர். மீண்டும் இவர் தஞ்சைக்கே மாற்றப்பட்டனர்.

1917-ஆம் ஆண்டில் சென்னை முதன்மை மருத்துவ நிலையத்தில் மருத்துவராகச் சிவில் சர்சன் வரிசையில் அமர்த்தப் பட்டார். சென்னைப் பல்கலைக் கழகத்தார் எம். டி. பட்டத் தேர்வு 1920-ஆம் ஆண்டில் ஏற்படுத்தினர். ஏற்படுத்தியதும் அதில் சேர்ந்து அதே ஆண்டில் எம். டி. பட்டம்பெற்று வெற்றி யுற்றனர். மேல்நிலையிலுள்ள ஐ. எம். எஸ். அலுவல் மேனாட்டு

முதன்மையர்களுக்கு என ஒதுக்கப்பட்டுவந்த மருத்துவ நூற் பேராசிரியர் நிலைக்கு 1920-ஆம் ஆண்டில் முதன்முதலாக நம் முதலியாரவர்கள், அமர்த்தப்பட்டனர். இவர்களுக்கு முன் இவ் வரிய நிலைக்கு நம் இந்தியர்கள் எவரும் அமர்ததபபட்டா ரல்லர். இப்பெரும் சீரியநிலையினை நம் முதலியாரவர்களே முதற் கண் பூண்டு முதன்மையுற்றனர்.

1929-ஆம் ஆண்டு பிரித்தானியாவுக்குத் "தொபாடிக்ஸ்" போதனுமுறைகளை ஆராய்ந்துவர அனுப்பப்பட்டனர். அம் முறைகளை நன்காய்ந்து 1930-ஆம் ஆண்டு இந்தியாவுக்கு மீண்டு வந்தனர். வந்த அந்நாள் முதல 1937-ஆம் ஆண்டு ஊழியத்தி லிருந்து விலகும்வரை நம் முதலியாரவர்கள் "தொபாடிக்ஸ்" பேராசிரியராக இருந்து சீர் சிறப்புடன் பணியாற்றிவந்தனர்.

**ஊராண்மை**

1937-ஆம் ஆண்டு ஊழியத்திலிருந்து விடுதிபெற்றனர். இவ் விடுதிபெறுதலையே நம் பண்டைத் தமிழ்ச்சான்றோர் தவநிலை எனவும், துறவு எனவும், சிறந்தது பயிற்றுதல் எனவும் செப்புவர். இத் தவநிலை தொடங்கிய நாள்முதல் 1955-ஆம் ஆண்டு சூன்வரை நாட்டு மருத்துவமுறைக்கண் தகைசான்ற படியிலாப பணியாக (Honorary) இயக்குநர் (Director) நிலைமையில் எழிலுறத் தொண்டாற்றிவந்தனர்.

இவர்தம் இடைவிடா முயற்சியாலும் எழின்மிகும் உழைப் பினாலும் இந்திய மருத்துவப்பள்ளி கல்லூரி வரிசையினைப் பெற்று உயர்ந்து திகழ்ந்தது. இக் கல்லூரியில் இவர் ஆராய்ச்சித் திட்டங்களையும் சிற்றூர் மருத்துவபயிற்சித் திட்டங்களையும் மேற்கொள்ளச்செய்து ஆக்கமும் ஊக்கமும் அளித்து மேம் படுத்தினர். மேலும் இக் கல்லூரியில் மருத்துவப்பட்டம் பெறும் பாடமுறையையும் ஏற்படுத்தினர்.

**இறைபணி**

இறைபணி என்பது முப்பொருள் உண்மை தெளிந்து ஆண்டான் அடிமை நெறியாம் அகத்தவ வாழ்வின்கண் உறைத்துநின்று "என்கடன் பணிசெய்துகிடப்பதே" என மேற்கொண்டொழுகும் விழுத்தொண்டாகும். நம் முதலியா ரவர்கள் விழுமிய முழுமுதல் தெய்வ வழிபாட்டின்கண் மிகவும் மேம்பட்ட மெய்யன்பராவர். கடவுள் வழிபாடு முத்திறப்படும். அவை திருக்கோவிலின்கண் சென்று திருமுறை வழியாகச் செய்யும் வழிபாடு பொது எனவும், தத்தம் மனையகத்துத் தனியே பூசையறை என ஒன்றமைத்துக் கடவுட் படிமங்களை எழுந்தருளப்பண்ணி நாளும் வழிபட்டு வருவது பொதுச்சிறப்

பெனவும், அவரவர் அகத்தே "உள்ளம் பெருங்கோவில்" என்னும் திருமூலர் அருளிய தமிழாகமப்படி திருக்கோவிலமைத்து வழிபடுதல் சிறப்பெனவும் கூறப்படும்.

நம் முதலியாரவர்கள் இம் முத்திற வழிபாட்டினும் முதிர்ந்த பத்தியுடையவர். முத்திற வழிபாடு முறையுறப் புரியும் மொய்ம்பினர். நடுநின்றதாகிய மனையகத்து வழிபாடு தினையனைத்தும் வழுவாது செய்து போந்த சிவத்தொண்டர் நம் முதலியாரவர்களாவர். அம்மட்டுமன்று, வழிபாட்டிடம், வழிபாட்டுத் திருவுரு, வழிபாட்டிற்குவேண்டும் துணைப்பொருள்கள், வழிபாடாற்றுவோர் மேற்கொள்ளவேண்டிய அகம்புறத் தூய்மையும், அன்பு மேம்பட்ட இன்ப எழில் நிலையும், ஆற்றும் முறைமையும், "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கித" தீதறத் திருமுறைகளை ஓதிப் பணியும் சிறப்பும் எக்காலத்தும் முட்டின்றித் தாமே செய்து போந்த தனிச் சான்றோராவர். தெய்வ வழிபாட்டிற்குக் கூலியாள் முதலிய எவர் துணையினையும் நாடாத நற்றவத்தர். பல்வேறு முயற்சிகளாலும், செல்வப் பெருக்காலும், நனிமிக வுயர்ந்த நம் முதலியாரவர்கள் கடவுட்டொண்டில் தலைசிறந்த மெய்யடியார்களும் கண்டுவியந்து காதலிக்குமாறு ஈடுபட்டுள்ளார்கள் என்பதை யாமெல்லாம் நன்குணர்ந்து உளங்கொள்ள வேண்டிய இன்றியமையாத வொன்றாகும். அறிந்தோ அறியாமலோ கடவுள் வழிபாட்டைக் கருதாமலும், கைக்கொள்ளாமலும், தூண்டுவார் தூண்டுதலால் கைவிட்டும் பெரிதும் குழம்பிச் சில்லோர் அல்லலுறும் இக்காலத்து எல்லாராலும் நன்கு மதிக்கப் படும் நம் முதலியாரவர்கள் இத்துணை யாப்புறவோடு இடையறாது செய்து போந்த கடவுள் வழிபாடு அச் சிலலோர்க்கு நல்லறிவு புகட்டிப் பெருந்துணை புரியும் கலங்கரை விளக்கமாகும்.

திருத்தணித் திருக்கோவிற்றிருப்பணிச் செயற்குழுவின் தலைவராக இருந்து தம் பொருளை மிகுதியாக நல்கியதுடன் நேர்நின்று அரும்பணி பலவும் புரிந்துள்ளார்கள். திருப்பழனித் திருக்கோபுரத் திருத்தப் புதுப்பணியின் கண்ணும் பெரும் பங்கு எடுத்துள்ளார்கள். தனிப்பட்ட முறையில் செய்துள்ள திருக்கோவில் திருப்பணிகளும கொடைகளும் அளப்பில.

கல்விக் கொடை

கொடைகளுட் சிறந்ததாய், உயிர்க்கொடையாய்ப், பெரும் பயன் விளைப்பதாய், என்றும் பொன்றுது நின்று நிலவுவதாயுள்ளது கல்விக்கொடையாகும்; கல்விக்கொடை எனினும் மெய்யுணர்வுக்கொடை எனினும ஒன்றே. மெய்யுணர்வு—ஞானம். ஏழை மாணவர் பலர்க்கு அவர்தம் கல்வி முன்னேற்றத்தின் பொருட்டு வேண்டும் பணவுதவி புரிந்துள்ளார்கள். ஏழைப் பள்ளிப் பிள்ளை

கட்கு நண்பகல் உணவு அறச்சோறாக நல்கும்பொருட்டுப் பெரும் பொருள்வைப்பு வைத்து உதவியுள்ளார்கள். அறச்சோறு—இலவச வுணவு. சென்னைப் பல்கலைக் கழகத்தின் கலைமுதிர்க் கழக வுறுப்பினராகப் பல்லாண்டு பணிபுரிந்துள்ளார்கள்.

"தொண்டமண்டலத் துளுவவேளாளர் உயர்நிலைப்பள்ளி ஆட்சிக்குழுத் தலைவராக" விருந்து அருந்தொண்டாற்றியுள்ளார்கள். அம மட்டுமன்றி அக் கல்லூரிக்குத் தம பெயரால் பெரும் பொருட்செலவில் அழகியதோர் கட்டடம் கட்டி வழங்கியுள்ளார்கள். சென்னைப் பல்கலைக் கழகத்தார் இவர்தம் அரும்பெரும் தொண்டினைப் பாராட்டி அறிவியல் முனைஞர்—"டாக்டர் ஆவ் சயன்ஃசு" என்னும் சிறந்த பட்டத்தினைப் பல்கலைக்கழக நூற்றாண்டு விழாவின்போது வழங்கியுள்ளார்கள்.

## பொதுப்பணி

நம் முதலியாரவர்கள் ஆட்சித் துறையிலும் தொழிற்றுறையிலும் மிகவும் சிறப்புற ஆற்றுந் திறலினர் சில தொழில் நிலையங்களின் பங்கும் சில நிலையங்கள் தம்முரிமையாகவும் கொண்டுள்ளார்கள். பல தொழில் நிலையங்களில் இயக்குநர் குழுவில் எழில் சிறந்தவர்களாக இருந்து பணியாற்றியுள்ளார்கள். எடுத்துக் காட்டாக "இந்தியன் பாங்கியின்" இயக்குநராகப் பல ஆண்டுகள் பணிபுரிந்துள்ளார்கள். "சென்னைக் கூட்டுறவுப் பால்நல்கும் பண்ணை"யில், பதினெட்டு ஆண்டுகளாக விருந்து பணியாற்றியுள்ளார்கள். சென்னைச் சட்டசபை மேல்மன்ற வுறுப்பினராகப் பல்லாண்டு பணிபுரிந்தார்கள். அம்மட்டுமன்று, ஆட்சியினர் சிக்கனத்தின்பொருட்டு மன்ற வுறுப்பினர் தாம் தாமபெறும் ஊதியத்தில் வலியவந்து ஒருசிறு பகுதியேனும் வாங்காது வழங்கி ஆட்சியினுக்கு நலஞ்செய்யும் வாய்பபுநிலை வேண்டுசோள் வந்தது. அப்பொழுது நமக்குத் தெரிந்தவளவில் ஊதியத்தினை முற்றாக வழங்கி நலம் புரிந்த நல்லார் நம் முதலியார் ஒருவரேயாவர். இந்நிலை அவர்கள் தம் அவாவற்ற தவாப்பெரு நிலையைக் குறிக்கின்றது. இவர்கள் தம் பொதுப்பணி நன்றியறிதலாகச் சென்னைத் தொ. து. வே. உயர்நிலைப்பள்ளியும், சென்னைக் கூட்டுறவுப் பால்பண்ணையும் வேறு பல நிலையங்களும் மூடப்பட்டன.

## அருட்பணி

நம் முதலியாரவர்கள் தெய்வ வழிபாட்டின் பெறுபேறாக நாளும் மக்களுக்குச் சிறந்ததோர் நற்றொண்டுபுரிய நயந்துள்ளார்கள். ஒவ்வொரு நாளும் காலைப்போதில் ஏறத்தாழ ஒரு முழுத்த நேரம் இருநூற்றுக்கு மேம்பட்ட நோயாளர்களை நனிமிகு விரைவில் நன்காய்ந்து தக்க நன்மருந்துகளை எழுதி நல்குவர்.

அவ்வெழுத்தின்படி உட்கொள்ளும் மருந்து பெரும்பாலும் நற்பயனைத் தந்து நலமுறச் செய்வது உலகறிந்த வுண்மை. இத் தொண்டினைக் கைம்மாறுவேண்டாக் கடப்பாட்டுத் திருத் தொண்டாக நாளும் புரிந்துவந்தனர். நோயாளர் மனமுவந்து கடமைப்பாடாக நல்கும் காணிக்கையினையும் திருமுருகனடிக்கே சேர்ப்பித்துவிடும் சிவனடியாராகத் திகழ்ந்தனர் நோயாளிகளைக் கண்டவளவானே சிறு குறிப்பு நோக்கியவளவானே எம் மருத்துவரானும் பல்வேறு கருவிகள் கொண்டும் ஆய்வதற் கருமையான நோய்களையும் நாடி ஐயுறவின்றித் துணிந்துரைக் கும் நம் முதலியாரவர்களின் ஆற்றல் தனிப்பட்ட தெய்வ ஆற்றலேயாகும். தெய்வவாற்றலெனவே உயிர்முயற்சி ஏதுமின் றெனச் சிலர் எண்ணிவிடுகின்றனர். அதுவன்று அதன்பொருள். தெய்வத்தை மறவாநினைவுடன் ஆண்டான் அடிமை உறவாகக் கொண்டு செய்யும் முயற்சியே தெய்வவாற்றலென்பதற்குப் பொருள். மேலும நம் முதலியாரவர்களால் எழுதிக்கொடுக்கப் படும் மருந்து முறைகளைச் சிறந்த மருத்துவர்கள் அனைவர்களும் மறைமொழிபோன்று படித்துணர்ந்து மேற்கொண்டொழுகிவரும் உண்மை உலகறிந்த தொன்றாகும்.

## இறுதிக் கடமை

நம் முதலியாரவர்களின் வளமனைக்கு அவர்கட்குத் தாங்கள் செலுத்தவேண்டிய இறுதி நன்மதிப்பின் பொருட்டுச் சென்னை மாநில ஆளுநரும், அமைச்சர்களும், பல்வேறு மருத்துவ மேலோருமு, பொதுப்பணியாளரும், புலவரும், செல்வரும், பெரும்பேராசிரியர் மாணவர் முதலிய பல்லோரும், நகரமாந் தரும், பல்கலைக் கழகத் துணைவேந்தரும் பிறரும் இரவில் சென்று செலுத்திவந்தனர்.

## இறுதிக்கடன்

நம் முதலியாரவர்களின் இறுதிக்கடன் சைவமுறைப்படிச் சடங்குகள் பல ஆற்றி மிகச் சிறப்புற நிகழ்ந்தது. புறங் காட்டகத்து அறம் பலபுரிந்த நம் முதலியாரவர்களின் சீரும் சிறப்பும் எடுத்து மொழிந்த பலலோருள்ளும் சிறந்தார், சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் இலட்சுமணசாமி முதலியார், அமைச்சர் சி. சுப்பிரமணியம், டாக்டர் மு. வரதராசனார் முதலியோராவர்.

## வேண்டல்

நம் முதலியாரவர்களின் ஆவி என்றும் இறைவன் திருவடி நீழலின்கண் நீங்காதுறைந்து நிறை இன்பம் துய்த்துச் சிறப்புற

அன்னவன் பொன்னடியினை வழுத்துகின்றோம். கழகத்தாரின் கையறுநிலைப்பரிவு நம் முதலியாரவர்களின் அருந்தவச் செல்வர்களாகிய பெண்மக்கள் நால்வர்களுக்கும், ஆண்மக்கள் இருவர்கட்கும், குடும்பத்தார்க்கும் உரியவாகுக.

---

## இரங்கற்பா

### அறுசீர்அகவல் விருத்தம்

க. இருநான்கு திசைபுகழப் பலகலைகற்
றெவருமதித் திடவாழ்ந் தாங்கு
வருவார்க்குப் பிணியறிந்து மருந்துநல்கிப்
பொருள்வருவாய் மதியா மற்சீர்
பெருகாவ லேமனத்துக் கொண்டுபொது
நலத்தொண்டு பேணு மேன்மைக்
குருசாமிப் பெயர்க்கோமான் புவிமறைந்த
கொடுந்துயரங் கூறற் பாற்றோ.

உ. திருத்தமுறச் செம்மனத்திற் றெய்வவழி
செய்யுந் திறமு முண்மைக்
கருத்துடனந் நாடுமொழி கலைவளரப்
புரிந்தபெருங் கருணைத் தொண்டும்
வருத்தமிக வருமேழை மக்களுக்குப்
பிணிதவிர்க்கு மாண்பு மெல்லாம்
மருத்துவமா மணிகுருசா மிப்பூமான்
மறையவே மறைந்த வந்தோ.

ங. ஆய்ந்தகலை யறிவுமுயர் பண்புமெளி
யார்ப்புரக்கு மன்பு மெங்கே
வாய்ந்தநண்பு தமிழ்த்தொண்டு மனத்தூய்மை
வண்மைபுகழ் வாய்மை யெங்கே
ஏய்ந்தசிவப் பணியெங்கே யினியெவர்பாற்
காண்போம்யா மென்னே யிந்நாண்
மாய்ந்தனையே குருசாமி மன்னுநின்போ
லொருவர் வருவர் கொல்லோ.

---

# தீவினை

[வித்துவான், திரு. மாவை. துரை. பழநிமகாதேவன்]

*தீவினை யாவும் தீர நோக்கிடின்*
*அறியா மையே அடிப்படை யாக*
*எழுந்தவை யென்ன இயம்பி யிடலாம் ;*
*எங்ஙனம் ?*
*தவறெண்ணம் உடையோனும், தவறுத லாய*
*செயல்புரி பவனும் செவ்விதின் ஆயின்*
*வாழ்க்கைப் பள்ளியில் வயங்குமோர் நிலையினர் ;*
*கற்கு மோர்சிறுன் கற்றிடு தற்கு*
*உற்சருக்க* மாய எண்ணமும் உழைப்பும்*
*பாங்குற அமையின் ஆங்ஙனம் அவன்றன்*
*கற்றுத் துறைவல னைக் காண்குவம் ;*
*அந்நிலை எய்தா அளவையும் மாணவன்*
*இன்ன லெய்தி இடர்ப்படக் காண்குவம் ;*
*ஆகலின்,*
*தீவினை வெலப்படின் செய்வினை சிறக்கும்*
*தீவினை வெலப்படின் செம்மைய துள்ளமாம் ;*
*அத்தீ வினைதான்,*
*உலப்பிலாத் துயரம் ஓயா தீவது,*
*அல்குத லில்லா தாயினும் அதற்கு*
*நன்மருந் துண்டு, சின்மதி கொண்டு*
*பிறர்குற்றம், தீவினை பேணு தவற்றை*
*அடக்கிக் கொளலே ஆன்ற நிறையென்ப ;*
*அடக்கிக் கொளல்தான் அரும்பொறை என்னும்*
*பொற்குண மென்னப் புகலுவர் சான்றோர் ;*
*தம்மது பிறரது என்பவா மிருசார்*
*குற்றம் குறையறக் களைந்த ஞான்றே*
*அவைஒருக் காலும் அண்டிநம் உளத்தை*
*வாட்டா, வருத்த மாட்டா ; இங்ஙனே*
*தீவினை தீண்டாச் செழுமைகொள் குவமே.*

---

* *உற்சருக்கம் - அடிப்படை.*

# *வறுமை வளர்த்த வண்டமிழ்

[பேராசிரியர் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., பி. எல்,]

சங்க காலந்தொட்டு இற்றைநாள் வரையில் முடி மன்னர்களும் சிற்றரசர்களும், வேளிர்களும், வள்ளல்களும் தமிழை வளர்த்துவந்த வரலாறு மிகப்பெரிது. அதை விரித் தெழுதினால் ஒரு பெரிய புராணமாகவே பெருகிவிடும். சோழன் கரிகாலன் பட்டினப் பாலை பாடிய கடியலூர் உருத்திரங் கண்ண னாருக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசளித்தான். பதிற் றுப் பத்திற் காணப்படும் சேர மன்னர்கள் தாம் ஆண்டுவந்த நாட் டையும் ஈன்ற மகனையும் கூடப் புலவர்களுக்குப் பரிசிலாக வழங்கியிருக்கக் காண்கிறோம். குமணன் தமிழுக்குத் தலை யையே கொடுத்திருக்கிறான். கலிங்கத்துப் பரணி பாடிய செயங் கொண்டார் ஒவ்வொரு தாழிசைக்கும் ஒரு தங்கத் தேங்காயாகப் பரிசு பெற்றிருக்கிறார். மன்னருக்கு உரிய வரிசைகளையெல்லாம் புலவர்கள் பெற்றுச் சிறப்புற வாழ்ந்திருக்கிறார்கள். அதனால் பைந்தமிழும் பண்ணைப் பனைத்துச் செழித்தோங்கி வளர்ந்தது. இவ்வாறு வள்ளல்கள் வளர்த்த வண்டமிழ் ஒருபுற மிருக்க, மற் றொருபுறம் வறுமை வளர்த்த வண்டமிழும் வயங்கி நிற்கக் காணலாம்.

எல்லாப் புலவரும் எல்லாக் காலத்தும் எல்லாராலும் பாது காக்கப் பட்டனர் என்பது இல்லை. வயிற்றை வளர்ப்பதற்குப் புலமையை ஒரு தொழிலாகக் கொள்ளும் பொழுது சங்கடம் வரத்தான் செய்கிறது. வயிற்றுப் பிழைப்புக்கென்று ஒருவன் எத்தொழிலையும் கற்றுக்கொள்ளலாம். அத்தொழிலைக்கொண்டு தான் எதிர்பார்த்தபடியே வேண்டும் பொருளை அவன் ஈட்டவும் செய்யலாம். ஆனால் வயிற்றுப் பிழைப்புக்காக ஒருவன் கவிஞ னாக மாறிவிடமுடியாது. கவித்திறமை காசு கொடுத்து வருவது மில்லை. காசுக்காக விற்கப்படுவது மில்லை. கவிஞன் என்பவன் கருவிலேயே திருவுடையவனாய்ப் பிறக்கிறான். அவனை அறி யாமலே கவியும் அவனிடமிருந்து கிளம்புகிறது. பல்வேறு உணர்ச்சிவேகங்களால் உந்தப்பட்டு உண்மைக் கவிதையானது குமிழியிட்டு உள்ளத்திலிருந்து பாய்கிறது. அதைப் புலவனால் தடுத்து நிறுத்திவிடவும் முடியாது. கவி பாடுதல் என்பது ஓர் அருமையான தெய்வீக சக்தி. அதனால் அதனை உலகெங்கணும்

---

* திருச்சி வானொலி நிலையத்தாரின் இசைவுபெற்றது.

அறிவுடையோர் பாராட்டுகின்றனர். ஆனால் கவிஞன் தன் ஆற்றலை மிகவும் கீழான நிலைக்கு இழுத்துச் செல்லும்பொழுது, கவியும் கெட்டுக் கவிஞனும் கெட்டுவிடுகிறான். அதனால் அவ னுக்குச் சிறுமையும் துன்பமும் வந்து சேர்வனவாகும். உயர்ந்த கவிஞர்களுக்குப் போதிய பொருளாதார வசதிகளை முற்காலத் தில் அரசாங்கமே வகுத்துக் கொடுத்து வந்தது. கவிஞர்களும் உயர்நெறி யொழுகி, உவப்போடுங் கூடி வாழ்ந்து, மக்களுக்கும் நாட்டுக்கும் நல்லுரைகளை வழங்கி நலம்செய்து வாழ்ந்தார்கள்.

பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து, அயலாருடைய படை யெடுப்புகள் ஏற்பட்டுத் தமிழ்நாடு தளர்ந்து குன்றிய காலத்துப் புலவர்களுக்கும் அரசாங்க ஆதரவு அற்றுப் போய்விட்டது. தனிப்பட்டவர்களுடைய அருட்குணமே புலவர்களை ஆதரிக்க வேண்டிவந்தது. பொது மககளுடைய கை பார்த்து அவர்கள் வாழவேண்டிய நிலை ஏற்பட்ட பொழுது, அவர்கள் இச்சகம் பேசித் திரிந்து, இல்லாதும் பொல்லாதும் சொல்லிப் பொய்யும் புனைந்துரையும் கூறிப் பிழைக்கவேண்டி வந்தது. அதனால் புல மைத் தொழிலும் சீர்கெட்டுப் பலருடைய வெறுப்புக்கும் ஏள னத்துக்கும் புலவர்கள் பாத்திரரானார்கள். அந்நிலையில் புலவனு டைய புனிதத்தன்மை பாழ்பட்டு விட்டது.

உலகில் எந்தத் தொழிலுக்கும் ஒருதேவை உண்டு; கிராக்கி இருக்கிறது. அதனால் அத்தொழில்களுக்கு ஒரு நிலைத்த வருவாயும் இருக்கிறது. ஆனால் புலமைத்தொழில் அத்தகைய தன்று. முதலிலே, புலமையை ஒரு தொழிலாகக் கொள்வதே தவறு. மேலும், ஒருவனுடைய கவித்திறமையை எல்லாரும் ஒன்றுபோல் விரும்பி ஏற்றுக்கொள்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. கவிநயங்களை எல்லாராலும் ஒன்றுபோல் அறிந் துணர்ந்து அனுபவிக்கவும் முடியாது. கவிதை என்பது கற்ற வர்களே அறிந்து போற்றக்கூடிய ஓர் அரிய படைப்பு மற்றவர் களால் மதிப்பிட்டறிய முடியாத மாண்புடையது. “பாட்டினைப் போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா” என்று பாடினார் பாரதியார். கவியானது எல்லார்க்கும் இன்றியமையாத வேண் டப்படுவதாகவும் கருதமுடியாது. கவிநுகர்ச்சி யென்பது செழிப்பின்மேல் திகழக்கூடிய ஒரு செல்வப்பயனாய் அமை கிறது. கவியை நன்கு நுகரவல்லவர்கள் எல்லாரும் புலவர்களை ஆதரிக்கக் கூடிய செல்வநிலையிலே யிருப்பார்கள் என்றும் சொல்லமுடியாது. செல்வர்களாய் உள்ளவர்கள் கவிஞர்களை ஆதரிக்கும் வள்ளல்களாய் விளங்குவார்கள் என்று எண்ணவும் இடமில்லை. ‘தாதா கோடிக்கொருவர்’ என்பது அனுபவ ஞானத்தாற் கூறப்பட்ட ஓர் உண்மை.

செல்வ வாழ்க்கையை விரும்பாமல் எளிய முறையிலே வாழ்க்கையை நடத்தி ஏற்றம் புரிந்தவர் திருவள்ளுவர். அவர் வயிற்றை வளர்ப்பதற்காகக் கவிபாடியவ ரல்லர். மக்களுக்கு வாழ்க்கையில் உறுதி பயக்கும் பொருள்களையே திருக்குறளிற் பாடினர். ஆயினும் அவர் நூலில்,—

"இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு."

"நெருப்பினுள் துஞ்சலு மாகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது."

என்ற குறள்களைப் படிக்கும் பொழுது, புலமைக்குலமே புலம்பித் தவிப்பது போன்ற உணர்ச்சி நமக்கு ஏற்படுகிறது. வறுமையின் கொடுமையை வள்ளுவர்கூட அடைந்திருப்பாரோ என்ற எண்ணம் எழுந்து நம் மனதைப் புண்படுத்துகிறது.

ஒரு புலவன் வாழ்க்கையை வளம்படுத்த ஒரு வள்ளல் வேண்டியிருக்கிறது. வள்ளல் கிடைக்காவிடில் புலவன் வாழ்க்கை புல்லிதாகிவிடுகிறது. ஒருவன் மற்றொருவனுடைய அருட்குணத்தையே எப்பொழுதும் நம்பி வாழவேண்டும் என்றிருந்தால், அத்தகைய வாழ்க்கை எவ்வளவு தரங்கெட்ட நிலையற்ற துன்பம் நிறைந்த வாழ்க்கை என்பதைச் சிந்தித்தறியலாம். எந்த நேரமும் ஒரு புரவலன் கிடைக்க மாட்டானா என்று சுற்றியலையும் புலவன் இரவலனாகிவிடுகிறான். பழங்காலப் புலவர்கள் வள்ளல்களின் ஆதரவைப் பெற்றுச் சீரும் சிறப்புமுற வாழ்ந்தார்கள் என்பது உண்மையே யானாலும், வாழ்கையில் பல காலங்களில் வறுமையும் அவர்களை வாட்டி வருத்தியிருக்கிறது. தமிழ்ச்சுவை யறிந்த வள்ளல்கள் எங்கிருக்கிறார்கள் என்று தேடிக்கொண்டு புலவர்கள் நாட்டின் பல இடங்களுக்கும் நடந்து சென்று இளைத்திருக்கிறார்கள். ஆலூர்க்களப்பாளன் என்ற வள்ளலைக் காண்பதற்குமுன் தான்பட்ட பாட்டையெல்லாம் ஒரு புலவன் எவ்வாறு பாடினன் பாருங்கள்:—

"உள்ளங்கால் வெள்ளெலும்பு நோவ வொருகோடி
வெள்ளங்கா லந்திரிந்து விட்டோமே—தெள்ளுதமிழ்
ஆலூர் முதலி யரசர்பிரா னிங்கிருக்கப்
போலூர் அறியாமற் போய்."

இரட்டைப் புலவர்களுடைய கவித்திறமையை எல்லாரும் நன்கு அறிவர். அவர்களுக்குப் பிறவியிலே ஏற்பட்ட உடல் ஊனத்தோடு வறுமையும் கூடித் துன்புறுத்தியது. அதனால் அவர்கள் நாடுமுழுவதும் சுற்றிச் சுற்றிச் சோற்றுக்காகத் திரிந்திருக்கிறார்கள். கவிச்சுவை வல்லார் மாட்டும் அல்லார் மாட்டும்

செல்லாதிருந்து செழித்திருக்க அவர்களால் முடியவில்லை. சும்மா ஒருவன் பொருள் வழங்குவானா? அவனை இந்திரன், சந்திரன் என்றெல்லாம் புகழ்ந்து பாடி அவன் மனதை மகிழ் விக்கவேண்டும். அவ்விதம் செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசிப் புனைந்துரைகூறி முகமன்பாடி வயிறு வளர்க்கும் வாழ்க் கையை அவர்கள் விரும்பவில்லை. அதற்காக நொந்து வருந்தி னார்கள். மனம் இல்லாமலே பலர்மேல் பல புகழ்ச்சிப் பாடல் களைப் பாடிப் பரிசில் பெற்று வாழவேண்டியிருந்தது. அவர் களுடைய வறியநிலை அவர்களை அவ்வாறு செய்யத் தூண்டியது. அப்படியும் அவர்கள் வாழ்க்கை நிரம்பி வளமுற்றதாகக் காண வில்லை. இப்படியே பலரையும் இல்லாதும் பொல்லாதும் கூறிப் பொய்யான வாழ்க்கை வாழ்வதே பெரிய பாவச் செயலாதலால், அதன் தீவினைப்பயனே நல்குரவு விடாது வந்து தம்மை நலிகின் றதோ என்று உள்ளம் விட்டுப்பாடி உருகியிருக்கின்றனர் :—

"குன்றுங் குழியுங் குறுகி வழிநடந்து
சென்று திரிவதென்றுந் தீராதோ—ஒன்றுங்
கொடாதானைக் காவென்றுங் கோவென்றுங் கூறில்
இடாதோ நமக்கிவ் விடர்."

சில புலவர்கள் வறுமையின் கொடுமையால் தங்கள் மர புக்கே சிறுமை நேரும்படி நடந்து கொண்டனர். பரிசில் பெறும் ஆசையால் யாரை எவ்வாறு புகழ்வது என்று பொருத் தம் பாராது, பாலைவனத்தில் பாலைக் கொட்டியதுபோல் பாடல் களைத் தொடுத்தனர். ஒருவன் கல்வியறிவு சற்று மில்லாத மிகப் பொல்லாதவன். இம்மியும் பிறர்க்கு ஈயமாட்டான். வீரம் சிறிதுமில்லாத பயங்கொள்ளி. அவனைப்போய் மிகக் கற்றவன் என்றும், வீரன் என்றும், வள்ளல் என்றும் பாடினால், அவனால் அப் பாடலைச் சுவைக்க முடியுமா? "நீ என்னிடம் இல்லாத குணங்களையெல்லாம் இருப்பதாகச் சொன்னாய். அவற்றில் ஒன் றேனும் என்னிடம் இல்லை. ஆதலால், கொடுப்பதற்கும் என் னிடம் ஒன்றும் இல்லை" என்று சொல்லி அனுப்பிவிட்டான். புலவன் போய்க்கொண்டே வருந்திப் பாடுகிறான், பாருங்கள் :—

"கல்லாத வொருவனைநான் கற்றா யென்றேன்
காடெறியு மறவனைநா டாள்வா யென்றேன்
பொல்லாத வொருவனைநான் நல்லா யென்றேன்
போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்
மல்லாரும் புயமென்றேன் சூம்பற் றோளை
வழங்காத கையனைநான் வள்ளல் என்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்றான்
யானுமென்றன் குற்றத்தா லேகின் றேனே."

இந்த வழங்காத கையனுவது இல்லையென்று சும்மா அனுப்பினுன். இன்னொருவன் கடுகடுத்துச் சீறியெழுந்து அடிக்கவே வந்துவிட்டான். அவனுக்குப் புலவர்கள் என்றுலே அதிக பயம். ஏதாவது பாடலைப் பாடிவிட்டுப் பணத்தைப் பிடுங்கப் பல்லைக் காட்டுவார்கள் என்று அவன் நினைத்தான் அந்த உலோபியைப் போய் ஒரு புலவன் "காமதேனுவே! கற்பக தருவே! சிந்தாமணியே! அரிச்சந்திரனே!" என்று அளக்க ஆரம்பித்தான். ஒன்றும் கொடுக்காமல் புலவனை எவ்வாறு விரட்டியடிக்கலாம் என்று அக்கயவன் பார்த்தான். உடனே முகத்தில் சினத்தை வரவழைத்துக்கொண்டு கண்கள் சிவப்பேறத் துடி துடித்து, "அட பாவி! என்னை ஏசுவதற்கு உனக்கு என்ன துணிச்சலடா? காமதேனு ஒரு மாடு. கற்பகம் ஒரு மரம். சிந்தாமணி ஒரு கல். நான் ஒரு மனிதன். என்னைப் பார்த்து மாடு, மரம், கல் என்று எவ்வாறு திட்டலாம்? என்னை அரிச்சந்திரன் என்று சொன்னுயே: அவன் பறையனுக்கு அடிமையாய்ப் போனவன்; தன் மனைவியைப் பிறனுக்கு விற்றவன். அவ்வாறு நான் என்ன செய்தேன்? இந்த ஏசசுக்கள் எனக்கு எவ்வாறு பொருந்தும்? என்ன அநியாயம் இது!" என்று போட்ட கூச்சலில் புலவன் ஓடியே போய்விட்டான். இந்தக் குறையை மனிதர்களிடத்தில் முறையிட்டால் பயன் இல்லையென்று புலவன் தில்லை நடராஜன் முன் நெஞ்சுருகப் பாடினுன்:

"வாரும்நீர் யாரென்ன வித்துவா னென்னவும்
மதிமோசம் வந்த தென்றே
வாய்குளறி மெய்யெலா மிகநடுக் குற்றுநீர்
வந்தகா ரியமேதெனச்
சீருலா வியகாம தேனுவே தாருவே
சிந்தாம ணிக்கு நிகரே
செப்புவச னத்தரிச் சந்த்ரனே யென்னலுஞ்
சினந்திரு கணுஞ்சிவந்தே
யாரைநீ மாடுகல் மரமென்று சொன்னது
மலால்அரிச் சந்த்ரனென்றே
அடாதசொற் சொன்னையே யார்க்கடிமை யாகினேன்
யார்கையிற் பெண்டுவிற்றேன்
தீருமோ இந்தவசை யென்றுரைசெய் வெகுகொடிய
தீயரைப் பாடிநொந்தேன்
திருமன்றுள் நடுநின்று நடமொன்று புரிகின்ற
தென்தில்லை நட ராஜனே."

இவ்வாறு கடவுளிடத்திற் சென்று கதறித் தான் என் செய்வது? தன்னை உதறித் தள்ளிய உலகம் அக்கடவுளையும்

உருக்குலைய வைத்ததாகவே புலவனுடைய புண்பட்ட உள்ளத் திறகுத் தோன்றியது. கல்மனவர் கடைவாயிலுக்கு நடந்து நடந்து காலும் புண்பட்டது. அடைத்த கதவில் முட்டி முட்டித் தலையும் புண்பட்டது. தன் தமிழ்நிலையை உன்னி உன்னி மனமும் புண்பட்டது. இப்புண்ணெல்லாம் ஆறுவதற் குக் கடவுளிடத்திலாவது ஆறுதல் கிடைத்ததா? சிவன் தன்னைவிடவும் புண்பட்டுப் போனதாகவே புண்பட்ட புலவ னுக்குப் புலப்பட்டுத் தோன்றியது. பாடினான் :—

“ வஞ்சகர்பால் நடந்தலைந்த காலிற் புண்ணும்
வாசல்தொறும் முட்டுண்ட தலையிற் புண்ணும்
செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சிற் புண்ணும்
தீருமென்றே சங்கரன்பாற் சேர்ந்தே னப்பா
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும் வேடன்
கொடுங்காலால் உதைத்த புண்ணும் கோபமாகப்
பஞ்சவரி லொருவன்வில்லால் அடித்த புண்ணும்
பாரென்றே காட்டிநின்றான் பரமன் தானே.”

இந்தத் துன்ப நிலையிலிருந்து விடுதலை பெறுவதற்கு இயமனாவது வந்து உயிரைக்கொண்டு போகக்கூடாதா என்று புலவன் எண்ணினார். காலகாலனருகிற் செல்ல அஞ்சுவது போல், இயமன் தன் கிட்டவரவும் அஞ்சுகிறான் போலும்! அன்னம் காணாமையால் தானும் சிவனாகிவிட்டதாகவே புலவ னுக்குப் படுகிறது. சிவனைப்போல் தானும பிச்சையெடுக் கிறவன்தானே. இந்த நிலையில், புலவன் திருமலைராயன் என்னும் ஒரு சாளுவச் சிற்றரசனிடம் சென்றான். அவன் காரைக்காலுக்கு அருகில், தன் பெயரால் அமைந்த திருமலை ராயன்பட்டினத்தில் விசயநகர வேந்தரின் பிரதிநிதியாய் ஆட்சி புரிந்தான். அவனுக்கு விதரணராமன் என்ற சிறப்புப் பெயரும் உண்டு. அவன் தந்தை கோப்பயன் என்பான. அவனிடம் புலவன் தன் ஏழைமையை எடுத்துக்கூறினான். அப்பொழுது அவன் இடுப்பிலே ஒரு கந்தலாடைதான் ஒட்டிக்கொண்டிருந் தது. அதிலே ஆயிரம் பீறல். பசித்தீ வயிற்றைப் பற்றிக் கொண்டிருந்தது. வீட்டில் மனைவி மக்களுக்குக் காற்று ஒன்று தான் உண்ணும் உணவாயிருந்தது. தன் உடலில சத்தே இல்லையாதலால், தன்னைக் கொன்று ஆகக்கூடியது ஒன்றும் இல்லையென்று இயமன்கூடக் கொல்லாது விட்டுவிட்டான். புலவன் திருமலைராயனிடம் தன் வறிய நிலையைக்காட்டிக் கண்ணிலே நீரை ஒழுகவிட்டான். திருமலைராயன் புலவன் மனம் குளிரும் வகையில் ஆசைவார்த்தைகளை இன்பமாய் அள்ளி வீசினான். அவ்வரசன் கட்டிய சொற்கோட்டைகளைப் பார்த்

தால் தன்னை ஒரு குபேரனாகவே ஆக்கிவிடுவான்போலத் தோற்றியது. ஆனால் கடைசியில் அவை வெறும் வார்த்தைக ளாய்ப் போயின. சொன்னபடி செய்யவில்லை. வெறும் வாய்ப் பாயசம் காய்ச்சினதுதான் மிச்சம் என்பதைப் புலவன் உணர்ந் தான். வாக்கினால் தன்னைக் குபேரனாக்கிவிட்ட திருமலைராய னுக்குத் தானும் வாக்கினால் ஒரு கவிதையைப் பாடி, அதில் அவன் என்றும் சிரஞ்சீவியாய் விளங்குமபடி செய்தான். புலவ னுக்குப் பசி பொறுத்தாலும் பாட்டுப் பொறுக்கவில்லை. குபு குபுவென்று பொங்கி வந்தது. அதில் எக்காளமும் நையாண்டி யும் இகலிக்கொண்டு எழுந்தன. எட்டுத்திக்குப் பாலர்களையும் தன்னைச் சூழ்ந்திருக்கும்படியாகச் செய்து, சிறிய சுருக்கத்தும் தன் உயர்வைவிடாது காத்து, நகைச்சுவை ததும்ப நல்லதொரு பாட்டைப் பாடினான் :—

“இந்திரன் கலையா யென்மருங் கிருந்தான்
அக்கினி யுதரம்விட் டகலான்
எமனெனைக் கருதான் அரனெனக் கருதி
நிருதிவந் தென்னையென் செய்வான்
அந்தமாம் வருணன் இருகண்விட் டகலான்
அகத்தினின் மக்களும் யானும்
அனிலமதாகும் அமுதினைக் கொள்வோம்
யாரெதி ரெமக்குளா ருலகில்
சந்தத மிநத வரிசையைப் பெற்றுத்
தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயு மென்னை நிலைசெய கல்யாணிச்
சாளுவத் திருமலை ராயன்
மந்தரப் புயனுங் கோப்பய னுதவு
மகிபதி விதரண ராமன்
வாக்கினாற் குபே ரனாக்கினான் அவனே
மாசிலீ சானபூ பதியே.”

இப்பாடலைக் காளமேகப்புலவர் பாடினார் என்றும், திருமலை ராயன் அவரை ஒரு சொல்லால் குபேரனாக்கிவிட்டான் என்றும் கூறுவர். காளமேகப்புலவர் ஊர் ஊராய்ச் சுற்றி வாழ்ந்ததல்லாமல் குபேரனாய் வாழ்ந்தமைக்குப் போதிய ஆதாரம் இல்லை என்பதும் குறிப்பிடற்பாலது.

புலவர்களுக்குக் கல்வியறிவையும் கவித்திறமையையும் கொடுத்த கடவுள் கையிலே காசுபணம் கொடுக்காமற் போனது பெரிய குறைதான். ஆனால் புலவர்களுக்கு வறுமையிலும் வள மாகக் கவிகள் வண்ணவண்ணமாய் வந்துகொண்டிருந்தன

என்றால், அவ்வறுமையைக் கவி வளர்க்கும் செவிலி என்றுதான் நாம் போற்றவேண்டும். பசித்துவாடும் ஒரு புலவனுக்கு முன்னால் கல்லும் மண்ணும் காட்சியளிக்கின்றன. அவற்றை யாவது காய்ச்சிக் குடிக்க வழியில்லையே என்று ஏங்குகிறது அவன் உள்ளம். அப்பொழுது கவிதை தான் தான் என்று முந்திக்கொண்டு மேலெழுகிறது: பாடுகிறான் :—

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
 குடிக்கத்தான் கற்பித் தானா
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
 கொடுத்துத்தான் இரட்சித் தானா
அல்லைத்தான் சொல்லித்தான் ஆரைத்தான்
 நோவத்தான் ஐயோ வெங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
 புவியிற்றான் பண்ணி னானே."

எந்நாளும் மாறாத புலவர்களுடைய இந்த நிலையை எண்ணியே திருவள்ளுவரும், "திருவேறு தெள்ளிய ராதலும் வேறு" என்று கூறினார்போலும். ஆனால், அத்தெள்ளியோர் திருவுடையராகவும் திகழச் செய்யவேண்டியது மக்களாட்சி மேலோங்கி வரும் இந்நாளில் பொதுமக்களின் கடமையாகும்.

---

## வழிபாடு

நானில மாந்தர் மேனிலை எய்திச் சிறப்புடன் வாழத் தெய்வ நாட்டம் மிகுதியும் வேண்டற்பால தொன்றாகும். அந்நாட்டம் கைகூடு வதற்கு வாழ்த்தும், வணக்கமும், வழிபாடும் இன்றியமையாது வேண் டற்பாலன. நம் பண்டைத்தமிழ்ச் சான்றோர் மெய்ம்மையுணர்ந்த மேலோராதலான் முழுமுதற்கடவுளின் விழுமிய அருளிப்பாடு நம்மை நெருங்கியுள்ள உயிர்ப்பொருள் உயிரல் பொருள்களால் நமக்கு விளையும் உண்மையினை உணர்ந்தனர். அப்பொருள்களனைத்தையும் கடவுள் நினைவூட்டுந் தெய்வ உறையுளாக, உருவங்களாக வழிபட்டு வருமாறு மறைமொழிகாட்டி வழிப்படுத்தினர். அவ்வுண்மை, "அன்னையும் அத்தனும் முன்னறி தெய்வம்" என்பதனான் உணரலாம். நாமும் பேணும் அணுக்கப் பெரியோர்தாள் போற்றல்நலம், காணும் கடவுளுரு வென்பதைக் கைக்கொள்வோமாக.

—தொண்டன்.

---

# அந்தாதி*

[பண்டித, திரு. இராமசுப்பிரமணிய நாவலர்]

சீர்மை சான்ற செந்தமிழ் மொழியில் திகழும் செய்யுட் சிறப்பியல் நூல்கள், தொகைநிலை தொடர்நிலை என இருவகைப் படும். பல்வகைச் செய்யுட்களைப் பயன்படு முறையில் நூலாகத் தொகுப்பது தொகைநிலை எனப்படும். எட்டுத்தொகை நூல்கள் இவ்வகையைச் சார்ந்தவை. சொல்லால் ஆயினும் பொருளால் ஆயினும் தொடர்ந்து வரும் செய்யுட்களை உடையது தொடர் நிலை எனப்படும். சொல்லால் தொடர்ந்து வருவது சொற்றொடர் நிலை எனவும் பொருளால் தொடர்ந்து வருவது பொருட்டொடர் நிலை எனவும் வழங்கப்பட்டு வருகின்றன. அந்தாதி, கலம்பகம், இரட்டை மணிமாலை, மும்மணிக்கோவை முதலியன சொற்றொடர் நிலைகள். சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி முதலியன பொருட்டொடர் நிலைகளாம். பாட்டியல்களில் கூறப்படும் பிரபந்தங்களில் சொற்றொடர் நிலைகளும் பொருட்டொடர் நிலைகளும் உள்ளன. அப்பிரபந்தங்களில் அந்தாதி என்பது பற்றி ஈண்டுச் சிறிது ஆராய்வோம்.

அந்தாதி என்பது அந்தம் ஆதி என்னும் இரண்டு சொற்களா லானதொரு தொடர். அந்தம் என்பது முடிபு; ஆதி என்பது முதல். ஒரு பாட்டின் முடிபில் நின்ற எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்த பாட்டுக்கு முதலாக வரத் தொடுப்பது அந்தாதிக்கு இலக்கணமாம். அந்தாதிகள் வெண்பாவால் ஆயினும் கலித்துறையால் ஆயினும் பாடப்பெறும். அவை நூறு பாடல்களால் வரும்.

“பத்தாதி நூறந்தம் பல்சந்த மாலையாம்
ஒத்தாய வெண்பா ஒருநூறு—ஒத்தசீர்
அந்தாதி யாகுங் கலித்துறையும் அவ்வகையே
வந்தால் அதன்பேர் அவை.”

என்பது வெண்பாப் பாட்டியல்.

“நூறு வெண்பா நூறு கலித்துறை
கூறுதல் நூற்றந் தாதிக் கோளே.”

என்பது இலக்கண விளக்கப் பாட்டியல்.

வெண்பாவால் பாடப்படும் அந்தாதி வெண்பாவந்தாதி எனவும், கலித்துறையால் பாடப்படுவது கலித்துறை யந்தாதி

* திருவனந்தபுரம் வானொலி நிலையத்தில் ஒலிபரப்பப்பட்டது.

எனவும் வழங்கப்படுகின்றன. கலித்துறை என்பது ஈண்டுக் கட்டளைக் கலித்துறை. அந்தாதிகள் முப்பது பாடல்களாலும் பத்துப்பாடல்களாலும் பாடப்படுவது உண்டு. திருச்செந்தில் நிரோட்டக யமக வந்தாதி, சரசுவதி யந்தாதி முதலியன முப்பது பாடல்களால் வந்தவை. பத்துப்பாடல் கொண்டுவரும் அந்தாதி பதிற்றந்தாதி எனப்படும்.

"வெண்பாப் பத்துக் கலித்துறை பத்துப்
பண்புற மொழிதல் பதிற்றந் தாதி."

என்று கூறுகின்றது இலக்கண விளக்கப் பாட்டியல். வகை தோறும் பத்துப்பாடல் விழுக்காடு பத்துவகைப் பாடலால் நூறு பாடல் கொண்டு வருவது பதிற்றுப்பத்தந்தாதி எனப்படும். மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி முதலியன அதற்கு எடுத்துக் காட்டுக்களாம்.

வண்ணம் அல்லது சந்தக் குழிப்பால் பாடப்பெறும் அந்தாதிகளும் உள. அவை கலியந்தாதி ஒலியந்தாதி என்பன வாம். அவை இரண்டும் முப்பது பாடல்களால் வருவன. அவற்றின் விரிவை அந்தாதி யிலக்கியம் என்னும் கட்டுரை இனிது விளக்குகின்றது. கிடைத்த பாட்டியல்களுள் பன்னிரு பாட்டியல் ஒன்றே கலியந்தாதியின் இலக்கணம் கூறுகின்றது.

அந்தாதி யிலக்கியததை அந்தாதித் தொகை என்றும் வழங்குவதுண்டு என்பது,

"வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளில்
பண்பா யுரைப்பதந் தாதித் தொகையே."

என்னும் பன்னிருபாட்டியலால் விளங்குகின்றது. அதனை அந்தாதிமாலை என்றும், மாலை என்றும் வழங்குவர். அந்தாதித்து வந்த பாடல்களை உடைய வெண்பாப் பாட்டியலை, வெண்பா வந்தாதி என்றும், வச்சணந்திமாலை என்றும் வழங்குவர். 'உரையி னால் இம்மாலை யந்தாதி' எனக் காரைக்காலம்மையாரால் வழங்கப் பட்டது காண்க.

அந்தாதியிலக்கியங்கள் முதல் தமிழ்க் கழகக் காலத்துக்குச் சிறிது முன்பே வழக்கில் இருந்திருக்கவேண்டும் என்பது ஆராய்ச்சியால் விளங்கத்தக்கது ஒன்றாகும். பன்னிருபாட்டிய லுள் எடுத்துக்காட்டுச் சூத்திரங்களாக வந்துள்ளவை, பொய்கை யார், பரணர், கபிலர், இந்திரகாளியார், அவிநயனார் முதலியோ ரால் யாக்கப்பெற்றனவாக அறியப்படுகின்றன. ஆகவே, அவரால் இயற்றப்பெற்ற பாட்டியல்கள் இருந்திருக்கவேண்டும். வெண்பாப் பாட்டியல் உரையாசிரியர் அந்நூலை இந்திரகாளியம்

என்னும் பாட்டியலின் வழிநூல் என்று குறிப்பிடுவது நாம் இங்கே நன்கு கருதத்தக்கதாம்.

"முன்பிற் செய்யுள் முதலெழுத் ததற்குப்
பொருத்தமும் விருத்தமும் பகையுங் கொளலே."

என்பது அகத்தியர் பாட்டியற் சூத்திரம் என்று எடுத்துக் காட்டப்படுவதனுல், அகத்தியரால் எழுதப்பட்ட பாட்டியல் ஒன்று இருந்திருக்கவேண்டும் என்று தெரிகின்றது.

பாட்டு, உரை, பிசி, வாய்மொழி, அங்கதம், பரிபாடல், பண்ணத்தி, அம்மை, அழகு தொன்மை முதலிய பாடல் வகைகளுக்குத் தொல்காப்பியனுர் இலக்கணங் கூறுவதனுல், அவ் வகைப்பட வந்த பாடல்களால் ஆகிய நூல்களையும் அவர் உடன் பட்டவராதல் விளங்குகின்றது. அந் நூல்களில், விருந்து என்பது கலம்பகம் முதலியனவுமாம் என நச்சினுர்க்கினியர் கூறிப் போந்தமையும் இங்கே கருதத்தக்கதாகும்.

"அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தன ருணர்த்தல்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்."

என்னுஞ் சூத்திரத்தால் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பும் பாட்டியல் நூல்கள் இருந்தன என்று கொள்ளலாகும். பத்துப் பாட்டு நூல்கள் அவ்வழி வந்தன ஆகாவோ ?

அந்தாதி என்பதொன்றைத் தொல்காப்பியர் கொண்டிலர் ஆயினும், 'பொழிப்பும் ஒரூஉவும்' என்னுஞ் சூத்திரத்தின் உரையில், நச்சினுர்க்கினியர் அசையந்தாதி சீரந்தாதி என இரு வகை அந்தாதிகளைக் குறிப்பிடுகின்றனர். 'அந்த முதலாத் தொடுப்ப தந்தாதி' என்று, சீரிய செந்தமிழ்க் காரிகை கூறு கின்றது. 'ஈறு முதலாத் தொடுப்ப தந்தாதி' என, நீப்பருஞ் சிறப்பின் யாப்பருங்கலம் நிகழ்த்துகின்றது. இங்குக் கூறியவை ஒரு செய்யுள் அடிகளிலே வரும் அந்தாதித் தொடைவிகற்பங்கள் ஆகும். செய்யுள் உறுப்பாகிய இவ்வந்தாதித் தொடையே, ஒரு பாட்டின் இறுதி அடுத்த பாட்டுக்கு முதலாகத் தொடுக்கப்படும் செய்யுளந்தாதிக்கு அடிப்படை என்பது நன்கு விளங்குகின்றது. 'செய்யு ளந்தாதி சொற்றொடர் நிலையே' என்றார் அணிநூலார்.

நக்கீரர் பாடிய 'கைலைபாதி காளத்திபாதி யந்தாதி'யும், கபிலரும், பரணரும் பாடிய 'சிவபெருமான் திருவந்தாதி'களும் பந்தன் என்னும் வணிகர் தலைவன்மீது ஒளவையார் பாடிய 'பந்தனந்தாதி'யும் கடைத் தமிழ்க் கழகக் காலத்தவை. ஆதலால், கி. பி. முதல் நூற்றாண்டுக்கு முன்னரே செய்யு ளந்தாதிகள்

வழக்கில் இருந்தன என்பதை அறியலாகும். பொய்கையாழ்வார் என்பார் பொய்கையார் என்னும் புலவரே யாயின், அவர் பாடிய முதற் றிருவந்தாதியும் அக்காலத்ததாகக் கொள்ளத்தகும். காரைக்காலம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியும், சேரமான் பாடிய பொன்வண்ணத் தந்தாதியும், பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் பாடிய இரண்டாந் திருவந்தாதி மூன்றாந் திருவந்தாதிகளும், நம்மாழ்வார் பாடிய பெரிய திருவந்தாதியும், திருமழிசையாழ்வார் பாடிய நான்முகன் திருவந்தாதியும், நம்பியாண்டார் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியும், ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியும் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பட்டவை என்று கொள்ளத்தக்கன. சடகோபரந்தாதி, சரசுவதியந்தாதி முதலியன கி. பி. பத்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவை என்பர். திருவேங்கடத்தந்தாதி, அழகரந்தாதி, திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, கந்தரந்தாதி முதலியன கி. பி. பதினைந்து பதினேழாம் நூற்றாண்டுகளின் இடையே தோன்றியவை. பிற்காலத்துத் தோன்றிய அந்தாதிகள் தொகையில் மிகப் பல்கிக் கிடக்கின்றன. அவை பழமலையந்தாதி, திருச்செந்தில் நிரோட்டக யமக வந்தாதி, மறைசை யந்தாதி, 'கல் வளை யந்தாதி, மாவை யந்தாதி முதலியன. வெளிப்படாது ஏட்டில் அடங்கிக் கிடப்பனவும், இக்காலத்து ஏடுகளில் வடிவாகிக் கொண்டிருப்பனவும் ஆகிய அந்தாதிகளும் பல.

அந்தாதித்து வரும் பாடல்களால் இலக்கியங்களையும் இலக்கியப் பகுதிகளையும் இயற்றும் வழக்கம் தொன்றுதொட்டு நிகழ்ந்துவருவது ஒன்றாகும். பதிற்றுப்பத்தில் நான்காம் பத்து அந்தாதிச் செய்யுட்களால் அமைந்துள்ளது உதயணன் காதைச் செய்யுட்கள் அனைத்தும் அந்தாதியாகப் பாடப்பெற்றிருக்கின்றன. சேதிராயர் திருவிசைப்பாவும் புருடோத்தமநம்பி திருவிசைப்பாவும் அந்தாதியாக அமைந்துள்ளன. 'திருவாய்மொழி'யைத் திருவாய்மொழி யந்தாதி என்றே சொல்லிவிடலாம். இவ்வழக்கை நோக்க, இலக்கியங்களையும் தோத்திரங்களையும் அந்தாதியாகப் பாடும் முறைமை, செந்தமிழ்ப் புலவர்க்குச் சிறந்த சுவையளித்து வந்தது எனத் தெரிகின்றது. மனப்பாடம் செய்வதற்கு அந்தாதிபோலச் சிறந்ததொரு இலக்கியம் எய்துவது அரிதன்றோ?

இலக்கியங்களில் சில அந்தாதித்துப் பாடப்பெற்றிருப்பினும், அவை அந்தாதி என்னும் பெயரால் வழங்கப்படாது, சிறப்புடைப் பொருள்பற்றி வேறு பெயர்களால் வழங்கப்படுகின்றன. பல பொருள் கலந்துவருமாயின், அந்தாதி என்று வழங்குவதே மரபு. பிற்கால வைத்திய நூல்கள் பல, நூறு

முதல் ஏழாயிரம் வரை எண்கொண்ட பாடல்களால் அந்தாதித்துப் பாடப்பெற்றிருக்கின்றன. அந்தாதித்துப் பாடப்பெற்ற சோதிட நூல்களும் சில உள.

அந்தாதிகள் மண்டலித்துப் பாடப்படுவது மரபு. மண்டலித்து வருதல் ஆவது நூலில் இறுதிப்பாடலின் இறுதி அதன் முதற் பாட்டுக்கு முதலாக அமைதலாம். ஏதேனும் ஒருபாடல் மறக்கப்பட்டாலும், நினைவில் நின்ற ஒரு பாடலைத் தொடங்கிப் பாடிவரின், எல்லாப் பாடல்களையும் நினைவில் கொணர்வதற்கு இது சிறந்ததொரு நெறி ஆகும். அற்புதத் திருவந்தாதியின் முதற் பாடலைக் கேளுங்கள்.

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்.'

என்பது அப்பாடல். இனி, அதன் இறுதிப்பாடலைக் கேளுங்கள்.

"உரையினு லிம்மாலை யந்தாதி வெண்பாக்
கரைவினுல் காரைக்கால் பேய்சொல்—பரவுவார்
ஆராத அன்பினேடு டண்ணலைச்சென் றேத்துவார்
பேராத காதல் பிறந்து."

என்பது அப்பாடல். இதனுள், இறுதிப்பாட்டின் இறுதிச்சீராகிய 'பிறந்து' என்பது, முதற்பாட்டின் முதற்சீராய் அமைந்துள்ளது. இவ்வாறு வருவதே மண்டிலமாம்.

அந்தாதிகள் செம்பாகமாகவும் திரிபாகவும் யமகமாகவும் பாடப்படுவதுண்டு.

"விரிகின்ற ஞாயிறு போன்றது மேனியஞ் ஞாயிறுசூழ்ந்
தெரிகின்ற வெங்கதி ரொத்தது செஞ்சடை யச்சடைக்கீழ்ச்
சரிகின்ற காரிருள் போன்றது கண்டமக் காரிருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுள தாலெந்தை யொண்பொடியே."

என்னும் பொன்வண்ணத்தந்தாதிச் செய்யுள் செம்பாக நடை.

"இறவாத வானந்த வெள்ளத் தழுத்தி யெனையருளால்
துறவாத வானந்த ஆள்வதென் றோமெய்த் துறவர்தொழும்
அறவாத வானந்த னஞ்சூழ் முதுகுன் றடைந்தவர்தம்
உறவாத வானந்த கோபால னென்றற் குடையவனே."

என்பது பழமலையந்தாதித் திரிபு. திரிபு ஆவது முதலெழுத்தொழிய, இரண்டு முதலிய எழுத்துக்கள் அடிதோறும் ஒத்து

நின்று சொல்லின் திரிபால் வெவ்வேறு பொருள்பட்டு வருவது "இறவாத ஆனந்த வெள்ளத்து அழுந்தி எனை அருளால், துற வாது அவா நந்த ஆள்வது என்றோ, மெய்த்துறவர் தொழும் அறவா, தவா நந்தனம் சூழ் முதுகுன்று அடைந்தவர்தம் உறவா, தவா நந்தகோபாலன் என்றற்கு உடையவனே" எனச் சொற்றொடர்களை வேண்டியவாறு பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

யமகவந்தாதியை நோக்குவோம்.

"கந்தரங் கானந் தனிற்சென் றடங்கிலென் காசிக்கநே
கந்தரங் கானந்த நண்ணிலென் கன்னியர் கட்டளக
கந்தரங் கானந்த நின்றூ டெழிற்செந்தில் கண்டிறைஞ்சிக்
கந்தரங் கானந்த நல்கச் சனனங் கடந்திலரே."

என்பது திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதி.

யமகமாவது முதலில் நின்ற அடியின் முதலெழுத்து முதல் எத்தனை யெழுத்தாயினும் அடிதோறும் ஒத்துப் பொருள் வேறுபட்டு வருவதாம்.

"கந்தரம் கானம் தனில்சென்று அடங்கிலென், காசிக்கு அநேகம் தரம் கால் நந்த நண்ணிலென், கன்னியர்கட்டு அளக கந்தரம் கான் நந்த நின்றூடு எழிற் செந்தில் கண்டு இறைஞ்சி கந்தர் அங்கு ஆனந்தம் நல்க சனனம் கடந்திலரே.' எனப் பிரித்துப் பொருள் காணவேண்டும் இப்பாடல் நம் இரண்டு இதழ்களும் தம்முள் ஒட்டாமலே பாடத்தக்கதாதலால் நிரோட்டகம் எனப்படும். இது வடசொல். ஓஷ்டம் - உதடு. நிர்ஓஷ்டம் - உதட்டின் தொடர்பு இல்லாமை. நிர்ஓஷ்டகம் - உதட்டின் தொடர்பு இல்லாதது. திரிபும் யமகமும் ஐந்தெழுத்தில் குறைந்து வருவது சிறப்பாகக் கருதப்படுவதில்லை.

தோத்திரப் பொருளில் வரும் அந்தாதிகளிலும், அகப் பொருள்துறைகளை அமைத்துப் பாடுவது பெருவழக்கு ஆக உள்ளது. தமிழுக்கே தனிச்சிறப்பு உடைய அகப்பொருளை நாம் சுவைத்து இன்புறச்செய்வதில் தமிழ்ப்புலவர்களுக்கு மிகுந்த ஆர்வம் காணப்படுகின்றது.

"ஆவன யாரே அழிக்கவல் லாரமை யாவுலகில்
போவன யாரே பொதியகிற் பார்புர மூன்றெரித்த
தேவனைத் தில்லைச் சிவனைத் திருந்தடி கைதொழுது
தீவினை யேனிழந் தேன்கலை யோடு செறிவளையே."

சிவபெருமானைக் கண்டு கைதொழுத பெண் ஒருத்தி தனது மேகலையையும் கை வளைகளையும் இழந்துவிட்டதாகப் புலவர்

கூறுகின்றார். தலைவி எம்பெருமான்மீது கொண்ட ஆர்வம் முடிவுபெறாமையால், அவளது உடல் மெலிந்தது. மெலியவே, செழிப்புற்றுக்கிடந்த மேகலையும் வளைகளும் கழன்றுவிட்டன. இதனால், சேரமான் பெருமானடிகள் ஆகிய செந்தமிழ்ப் புலவர் தமக்கு எம்பெருமானை அடையாமையால் உண்டான புகலருந் துன்பத்தைப் புலப்படுத்துகின்றார்.

அந்தாதி இலக்கியங்களின் அமைப்பையும் அழகையும் பொருட் சிறப்பையும் புலப்படுத்தும் பொருட்டுச் சில செய்யுட் களைத் தருகின்றோம்.

"ஆயிர மாமறைக் கும்மலங் காரம் அருந்தமிழ்க்குப்
பாயிரம் நாற்கவிக் குப்படிச் சந்தம் பனுவற்கெல்லாம்
தாயிரு நாற்றிசைக் குந்தனித் தீபம்,தண் ணங்குருகூர்ச்
சேயிரு மாமர பும்செவ்வி யான்செய்த செய்யுட்களே."

என்பது சடகோபரந்தாதி.

"பரிசறியேன் பற்றிலேன் கற்றிலேன் முற்றும்
கரியுரியான் பாதமே கண்டாய்—திரியும்
புரமாளச் செற்றவனே பொற்கயிலை மன்னும்
பரமா வடியேற்குப் பற்று."

இது 'பற்று' என்று முடிந்தது, அடுத்த பாடல் 'பற்று' என்று தொடங்குகின்றது.

"பற்றாவான் எவ்வுயிர்க்கும் எந்தை பசுபதியே
முற்றாவெண் டிங்கள் முளைசூடி—வற்றாவாம்
கங்கைசேர் செஞ்சடையான் காளத்தி உண்ணின்ற
மங்கைசேர் பாகத்து மன்."

அடுத்த பாடல் 'மன்' என்று தொடங்கும். இது அந்தாதித்து வரும் முறைமை. இவை கைலைபாதி காளத்திபாதி யந்தாதி.

"சீர்மடந்தை கேள்வன் திருமடந்தை தன்கொழுநன்
போர்மடந்தை நாதனருட் போதையர்கோன்—பார்மடந்தை
மைந்தன் கடற்புகார் மாநாகன் தோன்றியந்தார்
எந்தையுளான் எங்கட் கிடம்."

என்பது இப்போது வழங்கும் பந்தனந்தாதி முதற்பாட்டு. இதில் சீர் என்பது மங்கலச் சொல். பிரபந்தங்களை மங்கலச் சொல் அமைத்துப் பாடுவதே மரபு.

"பயன்பெறலாம் இன்பப் பணிபெறலாம் என்றும்
நயன்பெறலாம் நட்ட நடுவே—அயன்பெற்ற

நாடனைத்தும் ஆளலாம் நற்குமர கோயில்வாழ்
வேடனைத்து தித்து விடின்."

என்பது குமரகோயிலந்தாதி.

அந்தாதி உலா முதலிய சிற்றிலக்கியங்களைப் பாடங்கேட்டு வரும் வழக்கம் இன்றும் காணப்படுகின்றது. அச்சிற்றிலக்கியங்களைப் பாடங் கேட்பதனால், அருஞ்சொற்களையும் சொல்லமைப்புக்களையும் இலக்கண நுட்பங்களையும் அணிவகைகளையும் அறிந்து பேரிலக்கியங்களைக் கற்பது எளிதாகின்றது. செவ்விய தீவிய செழுஞ்சொற்களை அறிந்து, அவற்றின் தொகுதியை உள்ளமைத்தல் கவிபாடுந் திறனை அளிக்கவல்லதாகும். அந்தாதிகள் படிப்பார்க்கு உள்ளத்தில் ஒரு சிற்றகராதியைப் படைத்து அளிக்கின்றன. புலவர்கள் அந்தாதி முதலிய சிற்றிலக்கியங்களை இயற்றித் தமிழுக்கு ஆக்கம் அளிக்கவேண்டும். உலகிலே சிற்றிலக்கியங்களாலும் பேரிலக்கியங்களாலும் இணையற்று விளங்குவது, அந்தமில்சீர்த்திச் செந்தமிழாம் என மேனாட்டாரும் பாராட்டுவது, நமக்கு மாறாத மட்டற்ற மகிழ்ச்சியை மல்கச் செய்கின்றது. மேன்மேலும், அமிழ்தினும் இனிய தமிழ்மொழி குற்றமில் பெருமைச் சிற்றிலக்கியங்களால் செழுமையும் சிறப்பும் செறிந்து திகழ்தல்வேண்டும். தமிழின் ஆக்கமே தமிழகத்தின் ஆக்கம்; அதுவே நாகரிக நேர்மை; அதுவே நண்பமர் தமிழர் பண்பினது சீர்மை.

---

## அருளோன் அமைதி

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

கள்ளம் இல்லா நெஞ்சினனாய்
கலைகள் நிறைந்த அறிவினனாய்
உள்ளம் கனிந்த உதவியனாய்
உரம்சேர் பண்பு மிகுந்தவனாய்
விள்ளும் அன்பு தோய்ந்தவனாய்
விரையும் உளத்தைக் கடந்தவனாய்
உள்ளான் எவனோ அவனேகாண்
உயர்ந்த அருளைப் பெறுபவனே!

---

# பாரி முல்லைக்குத் தேரீந்தது

[வித்துவான், திரு. பெ. கோவிந்தன்]

பாரி பறம்பு நாட்டை ஆண்ட ஒருவள்ளல். பாரியின் இன்பதுன்பங்களில் பெரும் பங்குகொண்டவர் கபிலர் பெருமான். கபிலர் பாரியைக் கண்டு நட்புக் கொண்டபின் அவனை அவர் பிரிந்திலர். உடனிருந்த அவர் பாரியின் கொடைத் திறமையையும் படைத்திறமையையும் புகழ்ந்து பாடியுள்ளார். முல்லைக் கொடிக்குத் தேரீந்த கொடைமடம் பாரியின் கொடைச் சிறப்பை விளக்குகிறது.

'பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி'

என்று கபிலர் பாரியின் கொடைச் சிறப்பைப் பாடியுள்ளார். வள்ளல்கள் எழுவர்களுள் பலர் புலவர், பாணர், விறலியர் முதலியோர்களுக்குப் பரிசில் கொடுத்துப் பெருமை பெற்றனர். புலவர் முதலியோர்களுக்குப் பரிசில் கொடுத்ததே யன்றி மக்களினமல்லாத பறவையினத்து ளொன்றாகிய மயிலுக்குப் போர்வை கொடுத்துதவினான் பேகன். பறவை ஐயறிவுடையது. முல்லை மெய்யறிவாகிய ஓரறிவே உடையது. ஓரறிவுடைய முல்லைக் கொடிக்குப் பரிசில் கொடுத்த பெருமை பாரியைச் சார்ந்தது.

'அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்' என்று முடமோசியார் ஆய் வள்ளலைப் புகழ்கிறார். அறத்தையும் புகழையும் பெறுவதற்குத் தமிழ் நாட்டு வள்ளல்கள் வண்மையை மேற்கொண்டிலர். தம்மை வந்தடைந்தவர்களுடைய வறுமையை நீக்குவதற்கே வண்மையை மேற்கொண்டனர். பெருஞ்சித்திரனார், கழைதின் யானையார், வன்பரணர் முதலியோர்கள் மிகுந்த வறுமையுடையவர்கள். அவர்கள் தங்கள் வறுமையை வள்ளல்களிடம் எடுத்துரைத்துப் பரிசில் வேண்டிப் பெற்றனர். வள்ளல்கள் புலவர்கள் வறுமையை நீக்குவதற்குப் பெரும் பொருள் கொடுத்துதவினர். பேகனிடம் மயில் தன் வறுமையை எடுத்துரைக்கவில்லை. பேகன் தான் சென்ற காடொன்றில் மயிலைக் கண்டான். மயிலின் தோற்றம் பேகன் கண்களைக் கவர்ந்தது. அதன் அழகு, நடை, பார்வை, மெய்ப்பாடு முதலியவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தான். குளிரினால் அதன் மெய்யில்

நடுக்கம் ஏற்பட்டது. அதன் நடுக்கத்தைக் கண்டான். கண்டவன் அதனிடத்தில் இரக்கங்கொண்டான். அவன் உள்ளம் புலவர்கள் வறுமையைக் கண்டு இரங்கி நெகிழ்ச்சி யடைந்த வுள்ளம். அவன் கைகள் இல்லார்க்கு ஈந்து ஈந்து பண்பட்ட கைகள். அவன் உள்ளம் மயிலின் நடுக்கம் கண்டு இரங்கியது. அவன் கைகள் தன் தோள்களில் அணிந்திருந்த ஆடையை எடுத்து மயிலின் குளிரை நீக்குவதற்கு அளித்தன. விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் மக்களின் செயல் வேறுபாடுகளை அறியும் தன்மையுண்டு. வேடனுடைய வில்லையும் அம்பையும் பறவைகள் கண்டால் பறந்து ஒளிந்துகொள்ளும். பழம் புல் முதலியவற்றைப் பலமுறை காட்டி மக்கள் கொடுத்தால் பழகாத விலங்கும் பக்கத்தில் வந்து உண்ணும். பேகன் மயில் வணப்பைக் கண்டு மகிழ்ந்தான் மயிலின் நடுக்கத்தைக் கண்ட அவன் அதன் பக்கம் சென்று தன் ஆடையை எடுத்து அதன்மேல் போர்த்தான். பேகனுள்ளம் புலவர்களுடைய இன்னலை நீக்கி நீக்கிப் பண்பட்டிருந்தமையால் பறவையினத்தில் ஒன்றாகிய மயிலின் இன்னலையும் நீக்கியது. இரக்கமுடைய மக்களுடைய உள்ளம் நண்பர்கள் பகைவர்கள் ஆண்கள் பெண்கள் மக்கள் விலங்கு பறவை என்று பார்ப்பதில்லை.

பாரி பேகனைக் காட்டிலும் ஒருபடி மேலே செல்கிறான். அவன் ஓரறிவுப் பொருள்களையும் உயிர்ப் பொருள் என்று கருதுகிறான். செடி கொடிகளும் உண்ணுகின்றன; இரவில் உறங்குகின்றன; பருவகாலங்களில் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பொலிகின்றன என்பவற்றை அவன் அறிவான். தான் சென்ற காட்டில் தளர்ந்து வாடும் முல்லைக் கொடியை அவன் காண்கிறான். அதன் தளர்ச்சியை நீக்கக் கருதுகிறான். தன் தேரினைக் கொடுத்து ஈத்துவக்கும் இன்பம் எய்துகிறான். பாரி முல்லைக் கொடிக்குத் தேரீந்த வரலாற்றைக் 'கொடை மன்னர் பனுவல்' என்ற நூலில் அதன் ஆசிரியர் பல செய்யுட்களில் பல நயம்படப் பாடியுள்ளார். அவற்றுள் சில கருத்துக்கள் பின் வருவன.

கார் காலத்தில் மழை நன்கு பெய்திருந்தது. மரஞ் செடி கொடிகள் இலைகள் செறிந்து பூத்துப் பொலிந்திருந்தன. கார் காலத்தில் சிறந்து விளங்கும் காட்டின் காட்சிகளைக் காண்பதற்குப் பாரி தேரேறிச் சென்றான். செல்லும் நெறியில் ஓர் இடையன் காட்டில் மேய்ப்பதற்கு ஆக்களை ஓட்டிக்கொண்டு சென்றான். அவன் அவ்வாக்களைத் தன் வேய்ங்குழலிசையினால் ஓட்டுதற் கிசைக்கும் இசையை எழுப்பி முன்னே செலுத்தி அவற்றின்பின் சென்றான். பாரி ஆக்களைப் பார்த்தான். தேரை

விரைந்து ஓட்டிக் கொண்டு சென்ற அவன் விரைந்து ஓட்டினால் ஆக்கள் கலைந்தோடும்; இசையின்பத்தை இழக்கும் என்று எண்ணித் தன் தேரினை மெள்ளச் செலுத்தி அவற்றிற்கு ஊறு ஏற்படாதபடி அப்பால் சென்றான். தேர் காட்டினுள் புகுந்தது. தேரின் வரவையும் அதன்மேல் பாரி இருப்பதையும் கண்ட வண்டுகள் பண்ணிசைத்து வரவேற்றன. நாகணவாய்ப் புட்கள் வருக என்று பாரியை வரவேற்றன. மரங்கள் பலமலர்கள் தூவி வணங்கி நின்றன.

காட்டினுள் புகுந்த காவலன் காரினால் தளிர்த்துப் பூத்துப் பொலிந்த மரஞ்செடி கொடிகளைக் கண்டான். தன் நாட்டில் நன்னெறியில் பொருள்களை ஈட்டி ஆடை அணிகளால் விளங்கும் குடிகளைப்போல அவை காட்சி யளித்தன. அச்செல்வக் குடிகள் அருமையாகப் பெற்றெடுத்து வளர்க்கும் செல்வ மகார்களைப் போல மரஞ் செடி கொடிகளிலிருந்து விழுந்த விதைகளிலிருந்து முளைத்த சிறு கன்றுகள் காட்சி யளித்தன. அவற்றின் அழகுகளை யெல்லாம் பார்த்துக் கொண்டு சென்ற பொழுது பல செடி கொடிகளில் அழகிய மலர்கள் பூத்து விளங்கின. அம்மலர்களைப் பார்த்து 'உலகினில் மலரினும் உயர்ந்த துண்டுகொல்' என்று வியந்தான். மாமைக் கவின்பெறு மங்கையராயிருப்பினும் ஆவியன்ன அம்பூந்துகிலும் அழகில் விளங்கும் அணிகலங்களும் புனைந்து விளங்கினும் அவர்கள் மணத்தினாலும் வனப்பினாலும் சிறந்து விளங்கும் மலர்களைத் தலைக்கு முடித்தபின்பல்லவா முற்றுப் பெற்ற அழகுடையவராகின்றனர். மலர்களைத் தலைக்கு அணியாத பொழுது அவர்கள் முற்றுப் பெற்ற அழகுடையராகார் என்று எண்ணிச் சென்றான்.

மற்றொரு பக்கம் சென்றபொழுது சில செடிகள் பூத்திருந்தன. கண்கவர் வனப்புடையனவாயும் நறுமணமுடையனவாயும் விளங்கிய பூக்களால் ஆடிப் பாடித் திரியும் வண்டுகளைத் தம் பக்கலிழுக்க வலை வீசிக் கொண்டிருந்தன. மணம் வரும் வழியை நாடிச் சென்ற வண்டுகள் அந் நறுமணத்தோடு கண்கவர் வனப்புடைமையையும் கண்டு மலர்களையணுகி அடைந்து அவற்றினுள்ளிருக்கும் தேனினை நுகர்ந்து இன்புற்றேகின. இக்காட்சிகள் காமுகரைத் தம் வயப்படுத்தும் மகளிர்களையும் அவர்கள் வலையில் விழுந்து இன்பந் துய்த்துச் செல்லும் காமுகரையும் நினைப்பூட்டின. இவ்வாறு பல காட்சிகளையும் கண்டு பாரி மன்னன் தேரைச் செலுத்திச் சென்றான். காட்டினிறுதியில் அவன் செல்லும் பொழுது ஒருமுல்லைக் கொடியைக் கண்ணுற்றான்.

முல்லைக்கொடி மிகவும் சோர்ந்து துயருற்றிருந்தது. அதன் துயர்கண் டிரங்கிய கருவிளை அதன் பக்கத்திலிருந்து தன் மலர்க

ளாகிய விழிகளிலிருந்து கண்ணீர்விட்டழுது கொண்டிருந்தது. காந்தள் தன் மலர்களாகிய கைகளை அசைத்து முல்லையின் துயரத்தை ஆற்றிக்கொண்டிருந்தது. இத்தகைய அவலக் காட்சியைப் பாரி கண்டான். பாரி செடி கொடிகளும் உயிர்ப் பொருள் என்ற எண்ணமுடையவனுதலின் தேரினை நிறுத்திச் சிறிது நோக்கினன். முல்லை தன் முகைகளாகிய பற்களைக் காட்டி, 'அரசே, என் அவல நிலையைக் காண்பாயாக; என் துயரை அகற்றுவாயாக' என்று அவன் அடிகளில் விழுந்து கெஞ்சிக் கேட்டுக் கொள்வதுபோல அவனுக்கு முன் கிடந்தது. முல்லை தன்முன் கிடக்கும் குறிப்பை யறிந்த பாரி தேரினின்றிழிந்து அதன் பக்கஞ் சென்று பார்த்தான். காட்டிலுள்ள பற்பல மரஞ் செடி கொடிகளும் மழையினல் செழித்து வளர்ந்து பூத்துப் பொலிந்து கொண்டிருக்க, இம்முல்லை மட்டும் ஏன் வாட்டங்கொண்டிருக்கிறது என்று அதனைச் சுற்றிப் பார்த்தான். விலங்கோ ஆட்களோ இதனுக்கு ஊறு செய்யவில்லை. வாட்டங்கொண்டு துயருற்றிருப்பதற்குக் காரணம் பற்றி ஏறுவதற்குப் படர்கொம்பில்லாமையே யாகும் என்று எண்ணினுன். பின்பு இம்முல்லை என்னை மன்னனென்று அறிந்து நான் செல்லும் வழியில் கிடந்து தன் இன்னலை எனக்கு எடுத்துக் காட்டியதால் இதன் இன்னலை நீக்குவதற்கு இக்காட்டிலுள்ள கொம்புகளில் ஒன்றைக் கொண்டு வந்து நட்டுவது எனக்குக் கடமையாய் விடாது. என்பொருளை இதனுக்குக் கொடுத்து இதன் இன்னலைத் தீர்க்கவேண்டும் என்று எண்ணி, ஏறிவந்த தன் தேரையே அதன் பக்கஞ் செலுத்தி, அதில் பூட்டியிருந்த குதிரையை அவிழ்த்து நீக்கி விட்டு, முல்லைக் கொடிகளைக் கையால் எடுத்து அத்தேரில் படர்வித்துப் பார்த்தான். அதன் துயரைப் போக்கியதாக எண்ணினுன்.

"மெல்லிதழ்க் கருவிளை விழிகண் ணீர்விடப்
புல்லிவண் காந்தள்கை மறித்துப் போற்றவும்
சொல்லருந் துயரொடு வீழ்ந்து சோர்வுறும்
முல்லையைக் கண்டனன்; முகம்பு லர்ந்தனன்.

செல்பரி நிறுத்தினன் சிறிது நோக்கினன்
பல்வினைத் திறந்தெனைப் பார்க்க; பார்த்தென(து)
அல்லலைத் தவிர்க்கஎன் றடிவ ணங்கல்போல்
முல்லைவெண் முகையொடு முன்கி டந்ததே.

தேரினின் றிழிந்தனன் சென்று நோக்கினன்
மாரியிற் பொலிவது வாட்டங் கொள்ளுமால்
தேரிடின் ஊறிதற் கியாருஞ் செய்திலர்
பாரிடைக் கிடப்பது படர்கொம் பின்மையே.

மன்னவன் இவனென வழியில் தான்படும்
இன்னலைக் காட்டிய இதனுக் கென்பொருள்
தன்னைமற் றீவது தகுதி யாமென
உன்னினன் இரப்பவர்க் குயிரும் நல்குவான்.
படர்வதற்..........................................
கொடியைஅத் தேர்மிசைக் கொளுவி னனரோ.''

முல்லை பாரி கொடுத்த தேரைப் பெற்று தன் வாட்டம் நீங்கி மிகுபொருள் பெற்ற வறிஞன் போன்றும் அவனிடம் ஆடிப் பாடித் தேர் பெற்ற விறலியைப் போன்றும் மலர்ச்சி யடைந்தது.

"உறுபொருள் கைவர உவகை மீக்கொளும்
வறிஞனை நிகர்த்தது மண்ணெ லாம்புகழ்
அறிவுடை அண்ணல்பால் ஆடித் தேர்பெறு
விறலியும் நிகர்த்ததவ் வீகொள் முல்லையே.''

பாரி ஓரறிவுயிராகிய முல்லைக்குக் கொடுத்த கொடையைக் காட்டில் திரிந்து கொண்டிருந்த முகில் பார்த்து வியப்புற்று இவ் வோரறி வுயிராகிய முல்லைக்கும் விலையுயர்ந்த தான் ஏறிவந்த தேரைக் கொடுப்பானாயின், ஆறறிவிற் சிறந்த புலவர்களுக்கும் பாணர்களுக்கும் பாரி எத்தகைய பொருள்களைக் கொடுப்பனோ? அம்ம! இவன் கொடை மிகவும் வியப்பைக் கொடுக்கிறது. இவன் கொடையைத் தெரியாத காட்டிலுள்ள எல்லா வுயிர்க ளுக்கும் எடுத்துரைக்க வேண்டுமென்று எண்ணிக் காடுமுழுவ தும் பேரிடி யொலியால் இடித் தியம்பிப் புகழ்ந்தது.

"ஓரறி வுயிர்க்குமீ துதவு வானெனின்
பேரறி ஞர்க்கெவை பெட்பி னீவனோ?
பாரியின் வண்மையைப் பகர்வம் நாமெனக்
காரிடித் தேகுமால் கானம் எங்குமே.''

பாரி தான் தேரில் பூட்டி ஏறிச் சென்ற குதிரையிலிவர்ந்து அரண்மனை போய்ச் சேர்ந்தான். இவ்வாறு கொடை மன்னர் பனுவ லாசிரியர் பாரி முல்லைக்குத் தேரீந்த வரலாற்றை விளக்கி யுள்ளார். இனி இவ்வரலாற்றிலுள்ள அமைப்பையும் சில சுவை களையும் சில அணிகளையும் பார்ப்போம்.

முல்லைக்கொடி இருந்த இடம் முல்லைநிலம். முல்லை காடும் காடு சார்ந்த இடமுமாகும். முல்லை நிலத்திற்கு ஏற்ற காலம் கார்காலம். கார் காலத்துப் பெய்த மழையினால் காடு செழிப் படைந்திருக்கும். காட்டின் வளத்தையும் வனப்பையும் காண்ப தற்குப் பாரி காட்டிற்குச் செல்கிறான் என்று வரலாற்றுக்கு ஏற்ற காலத்தை ஆசிரியர் முதலில் வகுத்துக் கொள்கிறார். முல்லைக்

கொடியினிடத்தில் காணப்பட்ட இன்னலைக் கண்டு இரங்கி அதன் இன்னலைத் தீர்க்கின்றானாகலின் இரண்டாவது பாரியின் இரக்கத்தை விளக்குகிறார். பாரி தேரில் ஏறிச் செல்கிறான். சென்று கொண்டிருக்கும் பொழுது இடையன் தன் ஆக்களை மேய்ப்பதற்குக் காட்டிற்கு ஓட்டிக்கொண்டு செல்கிறான். ஆக்கள் ஒழுங்காகச் செல்வதற்குச் செல்கைக் குறிப்பைப் புலப்படுத்தும் இசையை இடையன் தன் வேய்ங்குழலில் இசைக்கிறான். இடையன் இசைக்கும் இசையில் மூழ்கி ஆக்கள் ஒழுங்காகச் செல்கின்றன. ஆக்கள் செல்லும் வழியிலேயே அரசனும் தேரை விரைந்து செலுத்துகிறான். தான் தேரை விரைந்து செலுத்திக் கொண்டு சென்றால் ஆக்கள் இசையின்பத்தை இழக்கும்; பல வழிகளில் சிதறிச் சென்றுவிடும். அவற்றிற்கு ஊறு ஏற்படுத்தப் பாரிக்கு எண்ணமில்லை. அவற்றின்மேல் இரக்கங்கொண்டு, அவற்றிற்கு ஊறு ஏற்படாதபடி பாரி தான் விரைந்து செலுத்திய தேரினை நிறுத்திப் பையச் செலுத்தி அவற்றைக் கடக்கிறான் என்று பாரியின் இரக்கமுடைமையை ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார். மேலும் பாரி இரக்கத்தோடு வரும் அவன் முகத்தையும் கண்களையும் அடக்கத்தோடு வரும் தேரினையும் கண்ட காட்டிலுள்ள வண்டுகள் பண்ணிசைத்து வரவேற்றன; நாகணவாய்ப் புட்கள் வருக என்று வரவேற்றன. மரங்களெல்லாம் மலர் தூவி வரவேற்றன என்றும் ஆசிரியர் விளக்குகிறார்.

பெரிய பெரிய மரங்களை விடுத்துச் சிறிய முல்லைக்கொடியைப் பாரி காண்கின்றானாகலின் அவன் காட்டிலுள்ள பல பொருள்களையும் கண்டு செல்கிறான் என்று மூன்றாவதாக நிகழ்ச்சியை ஆசிரியர் அமைத்துக் கொள்கிறார். மரங்களைப் பார்த்தான்; செடி கொடிகளைப் பார்த்தான்; அவற்றின் மலர்களைப் பார்த்தான்; செல்லும் நெறியில் முல்லையைப் பார்த்தான். பார்த்தவன் அதன் வாட்டத்தைக் கண்டான். கண்டவன் தான் ஓட்டிய தேரினை நிறுத்தினான்; இறங்கி முல்லைக் கொடியினருகு சென்றான். இரக்கங் கொண்டான். தன் தேரை முல்லைக் கொடிக்கு நல்கினான் என்று ஆசிரியர் பாரி வரலாற்றை அமைத்துக் கொண்டிருக்கிறார்.

நகை, அவலம், இழிப்பு, வியப்பு அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்ற காப்பியச் சுவை எட்டனுள், மெல்லிதழ்க் கருவிளை விழிகண்ணீர்விடப், புல்லிவண் காந்தள் கை மறித்துப் போற்றவும், சொல்லருந் துயரொடு விழுந்து சோர்வுறும் முல்லை என்ற பகுதியில் அவலச் சுவையும் 'பல்லினைத் திறந்தெனைப் பார்க்க பார்த்தெனது, அல்லலைத் தவிர்க்க என்று அடிவணங்கல்போல், முல்லைவெண்முகையொடு முன் கிடந்ததே'

என்ற பகுதியில் இழிப்புச் சுவையும் 'கொடியை அத்தேர்மிசைக் கொளுவினரோ' என்ற பகுதியில் கொடை பற்றிய பெரு மிதச்சுவையும் 'ஓரறிவுயிர்க்கும் ஈதுதவுவானெனின் பேரறி ஞர்க்கெவை பெட்பி னீவனோ' என்ற பகுதியில் வியப்புச் சுவை யும் அமைந்திருத்தல் காண்க.

தன்மை நவிற்சி முதலிய பலவகை அணிகளில் கருவிளை மலரை விழியாகவும் காந்தள் மலரைக் கையாகவும் அமைத் திருத்தல் உருவக அணியாம். கொழுகொம்பின்றி இயற்கை யாகப் படர்ந்து கிடக்கும் முல்லையைச் 'சொல்லருந் துயரொடு வீழ்ந்து சோர்வுறும் முல்லை' என்றும், முல்லைக் கொடியின் பக் கத்தில் இயற்கையாகக் கள்ளாகிய நீரைக்கொண்ட மலரோடு நிற்கும் கருவிளையைக் 'கருவிளை கண்ணீர்விட' என்றும், இயற்கை யாகக் காந்தள் மலர்ந் தசைவதைக் 'காந்தள் கை மறித்துப் போற்றவும்' என்றும், முல்லை தன் முகைகளோடு பாரி செல்லும் நெறியில் இயற்கையாகக கிடந்த நிகழ்ச்சியைப் 'பல்லினைத் திறந் தெனைப் பார்க்க பார்த்தெனது அல்லலைத் தவிர்க்க என்றடி வணங்கல்போல் முல்லை வெண்முகையொடு முன் கிடந்ததே' என்றும், காட்டில் இயற்கையாக இடித்துச் செல்லும் முகிலைப் 'பாரியின் வண்மையைப் பகர்வம் யாமெனக் காரிடித்தேகுமால் கானம் எங்குமே' என்றும் புலவர் இயற்கை நிகழ்ச்சிகளை வர லாற்று நிகழ்ச்சிகளோடு ஏற்றிக் கூறியிருப்பன தற்குறிப் பேற்ற அணிகளாம். கண்ணீர் என்ற தொடரைக் கள்ளாகிய நீர் என் றும் கண்களிலிருந்து வடிக்கும் நீர் என்றும் இருபொருள்பட அமைத்திருத்தல் சிலேடை யணியாம். பாரி கொடுத்த தேரைப் பெற்று முல்லைக்கொடி மலர்ச்சி யடைந்ததற்கு 'உறுபொருள் கைவர உவகை மீக்கொளும் வறிஞனை நிகர்த்தது' என்றும் 'அண்ணல்பால் ஆடித்தேர்பெறு விறலியும் நிகர்த்தது' என்றும் உவமையை எடுத்து விளக்குவது உவமை யணியாம்.

பாரி முல்லைக்குத் தேரீந்த பகுதியை வள்ளல்கள் எழுவ ருடைய வரலாறுகளைக் கூறும் 'கொடை மன்னர் பனுவல்' என்ற நூலில் முப்பத்திரண்டு செய்யுட்களால் அதன் ஆசிரியர் விரித்துக் கூறியுள்ளார். செய்யுட்கள் அத்தனையும் எளிய தமிழ்ச் சொற் களால் ஆக்கப்பட்டவை. வரலாற்றுக்கேற்ற அமைப்புக்களும் மோனை எதுகை முதலிய சொற்சுவைகளும் அவலம், இளிவரல், பெருமிதம், வியப்பு முதலிய பொருட் சுவைகளும் உருவகம், தற்குறிப்பேற்றம், சிலேடை, உவமை முதலிய அணிகளும் கற்பார்க்கு இனிமையையும் கருத்தாழ முடைமையையும் காட்டிக் களிப்பை உண்டாக்குவனவாம்.

---

# ஒண்தொடியின் நுண்பொருள்

[திருவையாறு, திரு. இரா. இராமாநுசம்]

" கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணே உள "

என்பது அருங்குறளின், இன்பத்துப்பால். காண்டல், கேட்டல் முதலிய வினைகள், தன்வயப்பட்டு எழும், தன்னினின்றும் பிரிக்க இயலாத தற்கிழமைப் பொருளன. ஈதல், கட்டுதல் முதலிய வினைகள் பிறவயப் பட்டு எழும், தன்னினின்றும் பிரிக்கக்கூடிய பிறிதின் கிழமைப் பொருளன. அங்ஙனமே தேமொழி, நறுநுதல், சேல்விழி முதலிய பெயர்கள் தன்னினின்றும் பிரிக்க இயலாத, தற்கிழமை நிலையின; ஒண்தொடி, சில்வளை எனும் பெயர்கள் தன்னினின்றும் பிரிக்கக்கூடிய பிறிதின் கிழமை நிலையின. நங்கை நல்லாளுக்கு நாணமும், மேகலையும் அணி என்றவழி நாணம் பிரித்தற் கருமையும், மேகலை பிரித்தற்கெளிமையும் உணரலாம். நிற்க; கண்டு, கேட்டு, உண்டு முதலிய தற்கிழமைப் பொருளுடை வினைகளை, ஒண்தொடி கண்ணே உள எனப் பிறிதின் கிழமைப் பெயரோடு புணர்த்துக் கூறியது ஒக்குமோவெனின், ஒக்கும். அதுவே **ஒண்தொடியின் நுண்பொருள்**. கண்டு, கேட்டு முதலிய உடலான் எய்தும் சிற்றின்பங்கள் தற்கிழமைபோல் தோன்றினும் அவை கையினின்றும் தொடி கழல்வதுபோல் அழியும் என்பதை உணர்த்தவே "**ஒண்தொடி கண்ணே உள**" என்றார். எனவே, குறிப்பாக உயிரின் இன்பமாகிய பேரின்பத்தை எய்த முயல்க எனவும் கூறியவாறு.

மேலும்,

" சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு."

எனும் நீத்தார் பெருமையின் குறளும் நம் கருத்தோடு ஒத்த நிலையது. சுவை என்பது உண்டல்; ஒளி என்பது காண்டல்; ஊறு என்பது உற்றறிதல்; ஓசை என்பது கேட்டல்; நாற்றத்தை நுகர்வது மூக்காகலான் மூக்கின் வினையாம் உயிர்த்தலே, நாற்றமாம். எனவே, கண்டு, கேட்டு முதலியன சுவை, ஒளி முதலியவற்றுள் அடங்கவே, ஒண்தொடி கழல்வபோல் சிற்றின்ப வேட்கை மற்றொழிய "வகை தெரிவான்" ஆகிய நீத்தார் நெறிக்கண் நின்று பேரின்பம் எய்துக என **ஒண்தொடியின் நுண்பொருளை** வலியுறுத்திக் கூறியவாறு.

---

# நயமும் சுவையும்

[திரு. தி. நா. அறிவுஒளி]

நயமும் சுவையும் இருவேறு தன்மை உடைய துய்ப்புணர்வு. நயம் அறிவு தொழிற்பட அமைகின்ற சுவை அடைவு. சுவையோ, உணர்வு தொழிற்பட அமைகின்ற சுவைநிலை. நயமோ, நுண்ணுணர்வும், நுண்ணறிவும் உடையார் மட்டுமே துய்க்குமாறு அமைந்த அருமையுடையது. சுவையோ யாவரும் எளிதில் அறிதற்கியைந்த எளிமைப் பண்புடையது.

இப் பொதுவிலக்கணம் பாட்டுக் கலைக்கும் பொருந்துவ தாகும். இவ்வுண்மையைத் தமிழ் மேதை திருவள்ளுவர் இரு வேறு குறட்பாக்களில் நுண்மையாகச் சுட்டியுள்ளார்:

“ செவியிற் சுவை உணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்.” (சஉ0)

“ நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.” (எஅங)

மேற் குறட்பாக்களிலேயே எத்துணை நுண்மையாக பொருளுக்கு ஏற்பச் சொல்லாட்சி பெய்துள்ளார் என ஆழ்ந்து ஆராய்ந்தால் குறள் நூலின் மாட்சி புலனாகும்.

‘ சுவை உணரா ’ என்ற தொடரில் சுவையானது உணர்வால் துய்ப்பது என்பதைப் பெற வைத்தார்.

“ நவில் தொறும் நூல்நயம் போலும் பயில் தொறும் ” என்ற தொடரில் நயமானது நவில, நவில, கற்கக் கற்கப், பயிலப் பயில அறிவின்பம் பயக்கும் என அறிவால் துய்ப்பதைத் தெளிவாக்குவார்.

நயம் சுவைப்பது அறிவின் செயலே என்பதை வள்ளுவர் மேலும் வற்புறுத்திக் காட்ட விழைவார் போல்; மிக நெருங்கிய தொடர்பும், உறவும் உடைய காதலர் வாழ்வோடு அறிவுத் தொழிற்பாட்டை இணைத்து உவமை உரைப்பார்.

காதலியோடு இன்பம் துய்க்கும் போதெல்லாம் புதிய புதிய சுவையை, வியக்கத்தக்க புதுமை இனிமையை, புதுப்புது அழகமைதியைத் துய்க்கும் காதலன் சேயிழையின் செறிவானது அறியுந்தோறும் நமது அறியாமையைக் காண்பதுபோல அமைந்துள்ளது என்பான்:

" அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு." (௧௧௧௦)

நண்பர்களின் தூய நட்புக்கு உவமையாக நவில்தொறும் நயம்தரும் நூல் கற்கும் கல்வி அறிவை அமைத்த வள்ளுவர் நட்பினும் சிறந்ததும், முதிர்ந்ததும், ஆழ்ந்ததுமான காதலுக்கும் அறிவு நல்கும் பயனையும், அதன்வழி மனிதர் தமது அறியாமையைத் தெளிந்து சிறப்படையும் புது அடைவு நிலையையும் உவமை கூறுவது மிகப் பொருந்தியது! இத்தகைய அறிவு விரும்பும் உவமை அமைதியை ஒப்பிட்டறிந்து கற்பதே நயம்தேரும் கல்வி. இத்தகைய பாட்டே நயம் பழுத்த பாட்டு!

மேற் குறட்பாக்களைச் சான்றாக வைத்துக்கொண்டு, அப்பாக்களின் நயமும், சுவையும் ஆராய்வோம்:

ஒரு சொல்லுக்கு நிலைமைக் கேற்ப, உணர்ச்சிக் கேற்ப, ஆளப்படும் இடனுக் கேற்ப, தன்மைக் கேற்ப பொருள் அமையும். 'ஒன்று' என்ற சொல் கணக்குத் துறையில் எண் மானத்தில் 'ஓரே ஒரு பொருள்' எனச் சுட்டுகின்ற எண்ணுப் பெயராகப் பொருள்படுகிறது. அதே 'ஒன்று' என்ற சொல்லைத் திருவள்ளுவர், திருக்குறளில்,

" மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வ(து) ஒன்று உண்டு." (௧௨௭௩)

" முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ள(து) ஒன்று உண்டு." (௧௨௭௪)

" செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்(து) ஒன்று உடைத்து. (௧௨௭௫)

" கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவ(து) ஒன்று உண்டு." (௧௨௭௧)

பலவகை உணர்வு நிலைகளை, கருத்துக்களைக் குறிக்க ஆளுகின்றார். இந்நான்கு குறட்பாக்களிலும் 'ஒன்று' என்ற சொல் ஒரே கருத்தையோ, ஒரே உணர்ச்சி நிலையையோ குறிக்காமல் பல்வகைப் பொருள் பயத்தலை ஆழ்ந்து அறிதல்வேண்டும். இனைய சொல்லாட்சிகளுக்கு ஒரு 'உரை'யை முடிபாக அறுதியிட்டு உரைத்தல் ஒல்லாது என்பது என் கொள்கை.

'புலவனின்மேதை' சில போதுகளில் தன்னை மறந்த தனிப் பேருணர்வில் ஆழ்ந்து, ஒப்பில்லா ஒண்மைப் படைப்புக்களை நல்கும். அத்தகைய பாடல்களுக்கு உரை வகுப்பது எளிதன்று. உரை வகுப்பின், அஃது அப் பாடலின் மெய்ப்பொருளைச் சிறை

யிடுதற் கொப்பாகும். இவ்வுண்மையையும் வள்ளுவரே கூறி யுள்ளார் :

" எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு." (சஉங)

" எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு." (ஙருரு)

முன்னுள்ள சஉங-ஆம் குறள் நுண்பொருட்களைக் குறித்து நிற்கிறது. பின்னுள்ள ஙருரு-ஆம் குறள் பருப் பொருளைக் குறித்து நிற்கிறது. முன்னது மனித அறிவுக்கு இலக்கணம். பின்னது மனிதர் ஆராய்ச்சிப் பண்பிற்கு இலக்கணம்.

எனவே, 'ஒன்று' என்ற சொல்லின் மெய்ப்பொருளைச் சொற்களால் விளக்க முடியாது. ஒவ்வொரு அறிவுடையோரும் அவ்வொரு சொல்லுக்கே பலவகைக் கருத்தைக் கற்பிப்பர். அக் கருத்து அவரவர் தன்மைக்கும், நிலைமைக்கும் ஏற்ப அமையும். இச் சிறிய சொல்லான 'ஒன்று' என்பதற்கே இத்தகைய பொருட் செறிவும், விழுப்பமும் அமைகிறதெனில், ஏனைய குறட்பாக்களின் மேதைச் சிறப்பைத் தனித்து விளம்பல் வேண்டுமோ ?

இனிச், 'செவியிற் சுவை யுணரா' என்ற குறளின் சுவை என்ன ? நயம் என்ன ?. என்று ஆய்வோம் :

சுவை உணரும் பொறி வாயிலுள்ள நாக்கும், அதன் நரம்புக் குழுவுமாகும். எனவே சுவை உணர்வது நாக்கெனவோ, வாய் எனவோ கூறுவது பொருந்தும். அவ்வாறிருக்கக் குறட் புலவர் செவியினாலும் சுவை உணரமுடியும் என்று 'அடித்துக்' கூறுமாற்றான் "செவியில் சுவை உணரா" என இசைத்தார். செவியில் நாக்கும், சுவை உணர் நரம்புகளும் இல்லை என்பதை வள்ளுவர் நன்கறிவர். அதனால் தான், செவிச் சுவை உணரத் திறமில்லாதான்—வாய்ச்சுவை மட்டுமே உண்டு சுவைப்பான்— மக்கள் தகுதிக்குரியனல்லன், அவன் மாக்களினத்தவன் என்றார்.

இவ்வாறு ஒன்றன் தகுதிச் சிறப்பை இன்னொன்றற்கு ஏற்றிக் கற்பனை வளத்தால் நம் அறிவை மயக்கும் இடம் சுவைப் பகுதியாம்!

மேற்பாடலில் செவிச் சுவை உணர்வே சிறப்புடையதாக வள்ளுவர் கருதியமையால் 'செவியிற் சுவை உணரா' எனச் செவியை முதற்கண் பாவில் அமைத்தார். இரண்டாவதாக 'வாயுணர்வின்' என வாயைப் பிற்பக்கம் அமைத்தார். இத்தகைய

கருத்தமைவும், அதற்கேற்ற சொல்லமைவும் அறிவு வியக்கத் தக்கவை. இவ்விடமே நயமான பகுதியாம்.

இன்றும் அறிவு வளமோ, கல்வி வளமோ இல்லாதானைச் 'சாப்பாட்டு இராமன்' என எள்ளி ஏசுதல் காண்கிறோம். இத்தகைய ஏசல் குறள்காலத்திருந்து மக்களிடை பயின்று வருகின்றதென்ற மக்கள் வாழ்வியல் வரலாற்றுண்மையை இக் குறட் பகுதி சுட்டுவது நுண்ணிய அறிவுபோற்றும் நயமான பகுதியாம்!

மேலும், வள்ளுவரே செவி உண்ணும் உணவு இல்லாத காலத்தே சிறிது வயிற்றுக்கு ஈயப்படும் என்பார்:

"செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்." (௪௧௨)

செவிவழி அறியும் அறிவை 'உணவு' என உருவகம் செய்த வள்ளுவர், வயிற்றுணவினும், அறிவு உணவு சீரியதென நிலைநாட்டினர். அம்மட்டோ! வயிற்றுக்'கும்' என்ற சொல்லில் இழிவு சுட்டும் 'உம்மை' அமைத்துச் சோற்றுணவை 'இறக்கிப்' பாடியுள்ளார்! எனவே உணவாக 'அறிவை'க் கூறிய அதே தொடர்புறவை (Continuty) ௪௨௦-ஆம் குறளிலும் அமைத்துச் 'செவியில் சுவை உணர்தல்' என்றார். இத்தகைய 'கருத்துத் தொடர்பு' காவியங்களில் இன்றியமையாது பேணப்படவேண்டிய ஓர் அரிய முறை. இக் காவிய இலக்கணத்தைக் கருத்துக் கோவைக்காகக் குறள்நூலில் பல பகுதிகளில் வள்ளுவர் கையாண்டுள்ளார். அத்தகைய மொழியாட்சியில் இவ்விடமும் ஒன்று. இஃது கருத்துத் தொடர்பு நயம் ஆகும்!

செவியுணவு வயிற்றுணவினுஞ் சீரியது எனக் கூறாமல், செவியுணவு இல்லாதபோது சிறிதே வயிற்றுக்கும் (போனால் போகிறது என்று இரக்கத்தோடு) ஈயப்படும் என்ற குறளால் பேரறிஞர் "நாச்சுவை", "வயிற்றவா" உடையராக இருக்க மாட்டார். அறிவிலாரே 'சோற்றுப் பிண்டங்களாக' மாக்கள் போல அலைவர்' என்ற குறிப்பைப் புலப்படுத்துவர். இக் கருத்தையே வேறுவகையாகக் கிரேக்க அறிஞரான சாக்ரடீசு என்பார், "நான் சாப்பிடுவதற்காக வாழவில்லை; வாழ்வதற்காகச் சாப்பிடுகிறேன்" என்று கூறி அருளினர். இதிலிருந்து அறிஞர் உள்ளங்கள் உணவுக்கென அலையாது, அறிவுக்கே ஏக்குற்று அவாக்கொண்டலையும் என்ற உண்மை பெற்றாம். இனைய நுண் கருத்தையே 'வாயுணர்வின் மாக்கள்' என்ற தொடரால் குறிப்பாக உணர்த்திய பகுதி நயத்துள் சீரியநயமான பகுதியாம்!

செவிவழி உணவு கொள்வதை சகஙு-ஆம் குறளில் "செவி உணவிற் கேள்வி உடையார்" என மீட்டும் குறள்மேதை குறிக்கின்ற நுண்மை நோக்கின், உணவு மிக இன்றியமையாத தாகும் என அவர் கருதினார் என்பது பெறலாம். அத்தகைய உணவினும் 'கேள்வி உணவு' சீரியது என்று அவர் தீர்வு கண்டார் என்பதும் தெளியலாம்!

இனி, செவியானது மூளைக்கு ஓசையைச் செலுத்தும் ஒரு வாயிலாகும். அதேபோல வயிற்றுக்கு உணவைச் செலுத்தும் வாயிலே வாய். உண்மையில் உணவைச் செப்பம் செய்து பயன் படுத்துவன வயிறும், அதைச்சார்ந்த வயிற்றுறுப்புக்களுமே. அதேபோல அறிவை அறிந்து பயன்படுத்தும் தன்மைவாய்ந்தவை மூளையும் அதைச்சார்ந்த நரம்புத் தொகுதிகளுமே. அவ்வா றிருக்கச் செவியையும், வாயையும் வீணே வம்புக்கிழுப்பது ஏன்? எய்தவனிருக்க அம்பை நோவதைப்போன்றதன்றோ இஃது! அற்றன்று. 'இட்டுக்கட்டிப் பேசுதல்' என்று வழக்காற்றில் கூறும் நடைமுறை இயற்கையையே பாட்டில் கையாண்டுள்ளார் வள்ளுவர். நம் வீடுகளில் பெண்களுக்குள் பகை உண்டானால், பகையாளிகளை நேரே ஏசிப் பேசாது, தம் குழந்தைகளையோ, சட்டி, பானை முதலிய வீட்டுப் பொருட்களையோ, படர்க்கையிலுள்ள இன்னார் என அறியமுடியாத யாரையோ 'சாக்கிட்டு'ப் பேசுவது இயல்பு. இம்முறை பண்டும் வள்ளுவர் காலத்தில் வழக்கத்தில் இருந்த தென்பதற்கு இக்குறளே கரி. வயிற்றையும்-மூளையையும் விட்டு விட்டு இவற்றோடு தொடர்புடைய வாயையும்-செவியையும் தம் பாட்டில் ஏற்றி ஆண்டுள்ளார் தமிழ் மேதை. இணைய, 'அறிவுச் சுவை நயங்கலந்த சுவை'ப் பகுதிகளாகும்!

இனி, 'நவில்தொறும்' எனத் தொடங்கும் குறட்பாவை ஆய்வோம் :

படிக்கப் படிக்க ஒரு நூலிலுள்ள கருத்துக்கள் நமக்குத் தெளிவாகப் புரியும். பின்னும் கற்கக் கற்க நம்மை யறியாது நம் மூளை அக் கருத்துக்களை ஆழப் பதிவு செய்து கொள்ளுவ தால் மனப்பாடம் ஆகும். இதனாலேயே 'இளமைக் கல்வி சிலை யில் எழுத்து' என்றனர். மனப்பாடம் ஆன பகுதி மறக்கவே மறக்காது. மறக்க முடியாதது எப்போதும் நினைவிலிருக்கும். நினைவில் நிறைந்தது சொல்லிலும் செயலிலும் வெளிப்படும். செயலாற்றலே கல்வியின் நோக்கம்!

இஃது 'நவில்தொறும் நூல்நயம்' நல்குவது. இதே போலப் பண்புடையாளர் தம் தொடர்பும் ஆகுமாம்!

ஒருவரோடு பழகப்பழக அவரைப் பற்றிய பண்புகள் கருத்துக்கள் நமக்குத் தெளிவாகும். மேலும், பழகப்பழக நம்மையறியாது நாம் அவரோடு இணைவோம். நாம் நட்பாட நட்பாட அவரும் நம்மோடு இணைவார். இந்த உறவு மறக்க முடியாததாகும். எப்போதும் ஒன்றிய உணர்வுக்கிழமை யமையும். நட்பின் திண்மை, நன்மையே விளக்கும்! இருசார்பி லும் ஒற்றுமைக் கூட்டுறவால் உறுதி விளையும். காப்பு அமையும்.

இஃது 'பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு' நல்குவது.

'சான்றோர் சான்றோர் பாலராப', 'கற்றோரைக் கற்றோரே காமுறுவர்', 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்', 'சான்றோர் பலர் யான் வாழுமூரே' என்ற கருத்துக்கள் மேற் குறளுக்குத் தூண்கள்போல அணிசெய்தலே நோக்கின் குறளார் பெய்த உவமை நயம் புலனாகும்! இத்தகைய 'பொருந்த அமைதி' அறிவு வியக்கும் இன்பச் சுவையாகும்!

'தொடர்பு' என்ற சொல் எச்சப்பொருட்டு. 'நிகழ்ந்து கொண்டே இருக்கும்' நிகழ்காலப் பொருள் நல்குவது. இடை யறாத 'கோவை உறவை' உணர்த்துவது. இச் சொல்லாட்சியால் பண்புடையார் நட்பு வளர்ந்துகொண்டே செல்வது; நலம் பயந்து கொண்டே இருப்பது என்பதை உணர்த்துவர். இத்தகைய ஒரு சொல்லின் கருத்தே குறளின் முழுப்பொருளுக்கும் உயி ராக ஆணிவேராக அமைவது அறிவு வியக்கும் 'மேதை நயம்' ஆகும்! இத் தொடர்பைப் பற்றிக் குறட் புலவரே, "நிறை நீர நீரவர் கேண்மை பிறைமதி" (எஅஉ) என்று மொழிந்தார். அதே கருத்துத் தொடர்பை அடுத்த குறளான 'நவில்தொறும்' என்பதில் அமைத்த காவிய இலக்கணச் சுவை மிக்க நயமான சுவை அமைந்தது!

இவ்வாறு குறட் பாக்களின் நயமும் சுவையும் நனி பயன் நல்குவதாகும். திருவாசகத்தில் 'நோக்கரிய நோக்கே நுணுக் கரிய நுண்ணுணர்வே' என்று பாடுமாப்போல, குறளுக்கும் பாடலாம். குறளின் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு சுவை மிக்க வரலாற்றையும், நயமான அறிவுணர்வையும் ஊட்டுவ தாகும்!

---

# காதல் மாட்சியும் அச்சொல் ஆட்சியும்*

[பண்டித, வித்துவான், திரு. த. வடிவேலன்]

என்றும் மாறுநிலையுடையதாய ஒருதனிப் பேரின்ப நிலையடைவதே மனிதவாழ்வின்—மனிதப் பிறப்பின் பயனாகும் என்பர் அறிஞர். அவா வழிப்பட்டு—ஆசை நிலைக்காளாகி தம் வாழ்நாளில் தாம் செய்தவினை தீர—தாம்செய்த நன்மை தீமையாகிய இருவினையின் பயனாக வந்த இன்ப துன்பங்களை அனுபவிக்க மீண்டும் மீண்டும் பிறவி யெடுக்கின்றன உயிர்கள் என்பதே இதுவரை மனித இனம் கண்ட உண்மை. உண்மையுணர்ந்து நன்மைதீமை செய்வதை மறந்து நல்வழி நடந்து உய்வடைய வழிகாணும் வாழ்வே நல்வாழ்வாகுமெனவும், அதற்கு இல் வாழ்வே உரியதாகுமெனவும் கண்டனர் பண்டைத் தமிழ் மக்கள். அவ்வில்வாழ்வு நல்வாழ்வாவதற்கு எழுமையுந் தொடர்ந்து வரும் அன்புநிலையால் கணவனும் மனைவியுமாகப் பிணைந்து இணையிலாப் பெருவாழ்வுகாணும் காதல்மணவாழ்வே உயரியதாகக் கொண்டனர். உலகறிய வாழ்ந்தும் காட்டினர். அதனால் தமிழர் பண்பாட்டை மனித இனம் மாண்புடைத்தென மதிக்க வைத்து மாளாது மாட்சி பெற்றனர்.

தமக்கென வாழாப் பிறர்க்குரியாராக வாழும் பேற்றினை உண்மைக்காதல் வாழ்வுதான் தந்துநிற்கின்றது. நான் அவன் என்றநிலை ஏற்படுமானால், நான் அவள் என்று எண்ணும்நிலை உண்டாகுமானால் அதுகாதல் வாழ்வாகாது. எனவே அது இல் வாழ்வென்னும் நல்வாழ்வுமாகாது. இருவரும் நான் அவனே, நான் அவளே என்ற உயரிய மனநிலையைப் பெற்று இருவரும் ஒருவரே என்ற ஒருமைநிலை அடைவார்களானால் அதுவே உண்மைக் காதல் வழிக்கண்ட நல்வாழ்வு—மதித்தற்குரிய இல்வாழ்வு. அவ்வொருமைப் பாட்டின் அனுபவத்தினாலேதான் இறைவனுடன் ஒன்றுபட்டு வினைநீங்கி வீடுகாணும் பெருவாழ்வினைப் பெற்று முடியா இன்பநிலை பெறுதல் கூடும். இல்வாழ்வே இறைவனை யறிந்து இன்பநிலையடையச் செய்யுமென்பதனை இன் தமிழ்ப்பாமாலை பாடியளித்த நாயன்மார்களும் இனிதெடுத்தியம்புகின்றனர்.

உண்மை அடியவனொருவன் தான் அடையவிரும்பும் கடவுளைக் கணவனாகவும்—தலைவனாகவும் தன்னைக் காதலியாகவும்

* 17-3-57-இல் இலங்கை வானொலியில் பேசியது.

கருதியே கடவுளுடன் உறவாடுவானென்பதையே எங்கும் காண்கின்றோம். கடவுளை அடையவிரும்பும் ஒருவன் தன்னைக் காதலியாகவும் கடவுளைக் காதலனாகவும் கொண்டு காதலனும் தலைவனைக் கண்டமாத்திரத்தே முன்வழித் தொடர்பால் அவனையே கருத்திற்கொண்டு தன்னைமறந்து அவனே தானாகிவிடுகிறான். திருநாவுக்கரசர் திருவாரூர்க் கடவுளைப் போற்றிப் பாடிய பாடலிலே இதனை அமைவுறக் காட்டுகின்றார்.

திருவாரூர்க் கடவுள் வீதிஉலா வருகின்றார். அக்காட்சியைக் கண்ணுற்ற மங்கை ஒருத்தி தன் உள்ளம் அவன் வழிச் செல்ல அதனால் ஆற்றாமை யடைகின்றாள். அது கண்ட தோழி அவள் நிலைக்கிரங்கி தலைவி தன் நிலைகெடக் காரணமேதோ என ஆராய்கின்றாள். அன்று வீதி உலாப்போந்த ஆரூரனே அவளது உள்ளத்தைக் கவர்ந்த கள்வனென்பதனை அறிந்து விடுகின்றாள். தலைவியைத் தேற்றவேண்டுமென்ற கருத்தால், அவளை அணைந்து அன்புடன் இன்மொழி கூறுகிறாள். 'பெண்ணணங்கே! நீ இப் பேதுறும் நிலையை விடுவாய். இன்று இங்கு உலாப்போந்தோன் எங்கள் பெருமானும் ஆரூரனே ஆவன். அவனே பேரருளாளன்' என்கிறாள். அதுகேட்ட அன்பின்வழிநின்ற தலைவி அளவிலா இன்பமடைகின்றாள். அவன் ஆரூரனென்றால் எவ்விடத்தான், எவ்வண்ணத்தான் என அவன்வண்ணம் அவனுறைவிடம் ஆகியவற்றை ஆராக்காதலுடன் கேட்டுத் தெரிந்து கொள்ளுகின்றாள். ஆரூரனைக் கேட்டமாத்திரத்தில் அவன் வழிச் சென்ற உள்ளமானது அவளை மீண்டும் தன் நிலை இழக்கச் செய்கின்றது. அவனே தான் வேண்டி நிற்கும் ஒருவன் என்ற பெருநிலையால் அன்புடன் பெற்று வளர்த்த தாயையும், அருமைத் தந்தையையும் அப்பொழுதே விடுகின்றாள். தன் உற்றோர் கொண்டுள்ள வாழ்க்கை விதிகளை விட்டு நீங்குகிறாள். தான் என்ற எண்ணம் அவளைவிட்டு மறைகிறது. தன் நிலை அற்றவளாகின்றாள். தலைவனையே பொருளாக விரும்பித் தலைவனே தான் ஆகின்றாள். இது தான் காதலி காதலனைப் பெற்று வாழும் உண்மை நிலையாகும் என்பதனையே,

"முன்னம் அவனுடைய நாமங்கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன் னாமங் கெட்டாள்
தலைப்பட் டாள்நங்கை தலைவன் தாளே."

என்னும் இத்திருத்தாண்டகம் தமிழ்ப் பெருமக்களுக்கு விளங்கக் காட்டி வீடுகாண வழிசெய்து நிற்கின்றது.

இதைக்காணும் நாம் தலைவி மாத்திரமே தான் என்பதனை மறந்து தலைவனைப் பெற்று வாழவேண்டும். தலைவன் தன் நிலை மறவாத் தன்மையனாய் நிற்றலே வாழ்வு பெறும் வழியெனக் கருதிவிடல்கூடும். அவ்விதம் தலைவன் தான் என்னும் தனி நிலையில் நிற்பானானால் அங்கு நாம் இல்வாழ்வென்னும் நல்வாழ்வைக் காணமுடியாது. தலைவனும் தன்னை மறந்து தான் அவளே என்ற நிலையடைவதே காதல் வழிமரபாகும் என்பதனையே மணிவாசகப் பெருந்தகையார் கடவுளர் மீது பாடியளித்த செந்தமிழ்ப் பாமாலையானது காட்டி நிற்கின்றது. தான் விரும்பிக்கொண்ட தலைவியொடு உளங்கலந்து உறவுகொண்ட தலைமகன் தான் என்ற நிலையை மறக்கின்றான். தான் அவளே என்ற நிலையை அடைகின்றான். தலைவியை அமுதெனவும் தன்னை அதன்கண் அமைந்துள்ள சுவையெனவும் அளவிலா இன்பநிலையால் அமைவு பெறக் கூறிநின்ற அவன் ஊழின்வழித்தம் உளங்கலந்து உவகையடைய உதவிநின்ற வினைத் தெய்வத்தைப் பாராட்டிப் பேசிநிற்கின்றான். இதுவே காதலன் காதலியை அடைந்து வாழும் உறுதி நிலையாகும் என்பதனையே,

"சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே
நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப்
பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பிற்
கற்பா வியவரை வாய்க்கடி தோட்ட களவகத்தே."

என்னும் திருக்கோவையார்ச் செய்யுள் நல்வாழ்வடைய அவாவி நிற்கும் அன்பர்க்கு எடுத்துரைத்துப் பேரின்பப் பெருநிலையடைய வழிகாட்டி நிற்கின்றது.

பெருமைமிகு வள்ளுவனாரும் தலைவியைப் பெற்ற தலைமகன் தலைவியொடு தான்கொண்ட நட்புநிலை உடம்பொடு உயிர்கலந்த தன்மையதாகும். உயிர் உடம்பினைப் பெற்றமையால் உயிரெனும் தன்தன்மை விளங்க நிற்கின்றது. அதுபோன்று தலைவியைப் பெற்றமையால் யானும் வாழ்வுபெற்றேன் எனத் தன் வாழ்வின் உண்மைநிலையைக் காதல்வழிவந்த இல்வாழ்வின் மாண்பினை,

"உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு."　(ககஉஉ)

என எடுத்துக் கூறுவதாக இருவரும் ஒன்றும் வாழ்வின் உண்மைநிலையை அமைத்துக் காட்டுவாராயினர். தலைவன் தன்னைவிட்டுப் பிரிந்து சென்றகாலை அவன் வரவை நோக்கி

நின்ற தலைவி தலைவனைக் காணுமாவலால் மனங்குலைந்து தலைவன் தன்னுவலை நிறைவேற்ற இன்னும் வாராதிருக்கக் காரணம் யாதோ? அவரோ அன்று 'நாம் இருவரும் வேறல்லோம், ஒருவரே' என்றல்லவா உரைத்தார் எனத்தன் நெஞ்சைத்தானே வினவுவதாக அமைத்த,

"விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பார்
அளியின்மை யாற்ற நினைந்து." (௧௨0௧)

என்ற பாடலிலும் இருவரும் ஒருவரே என்ற உயரிய மனநிலையையே "வேறல்லமென்பார்" என்ற தொடரிலே வைத்து விளங்கக் காட்டுகின்றார்.

காதலன் பிரிந்து சென்ற காலத்தும் காதலி தன் உள்ளத்தில் அவனையே கொண்டு அவனே தான் ஆகி வாழ்வாள் என்பதனையே காதலன் வரவை விரும்பி வருந்தும் உள்ளத்திற்குக் காதலி கூறுவதாகக் காட்டும்,

"உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு." (௧௨௪௯)

என்ற பாடலும் உரைத்து நிற்பதைக் காணலாம்.

வழிவழித் தொடர்ந்து வரும்—பிறவிதோறும் இணைந்து வரும் உயிர்த்தொடர்பே உளங்கலந்து உண்மைநிலை காணும் காதல் வாழ்வினை ஏற்படுத்தி விடுகின்றது; காதலரைக் கூட்டி விடுகின்றது என்பதே உலகினர் கண்ட உண்மை. இதனையே இங்குநாம் கண்ட திருக்கோவையார்ப் பாடலும் "நற்பால்வினைத் தெய்வம் தந்தின்று நானிவ ளாம்பகுதிப் பொற்பா ரறிவார்" என வியந்து காட்டி நிற்பதை நாம் காண்கின்றோம். கண்ட மாத்திரத்தே உளங்கலந்து ஒன்றுபடுகின்றனர் காதலர்கள். அவர்களோ முன்பு ஒருவரை யொருவர் அறியார். தம் உளங் கலந்த ஒருமை வாழ்வு இடையிற் குலைந்துவிடுமோ என்று அஞ்சுகிறாள் தலைவி. அதனையறிந்த தலைவன் அவளை நோக்கி, 'பெண்ணே! உன் தாயாரும் என் தாயாரும் ஒருவரை ஒருவர் அறியார். தந்தையர் உறவுமுறையுடையவரோ எனில் அதுதானும் இல்லை. நாம் இருவரும் முன்பு ஒருவரை யொருவர் அறிவோமோ என்றால் அவ்வித நிலையும் நம்மிடையில் ஏற்பட்டதில்லை. செம்மண் நிலத்திலே பெய்த மழைநீர் செந்நிறமண்ணுடன் இரண்டறக் கலந்து செந்நிற வெள்ளமாக ஆகிவிடுகின்றது. அதுபோலவே அன்பின் வழிப்பட்ட நமது உள்ளங்கள் இரண்டும் தாமாகவே கலந்தன—ஒன்றுபட்டன. முன்பு அறியா நம்மிடை உண்டாகிய அன்புநிலை விதிவழியாலன்றி வேறெதனால் ஏற்படமுடியும்?

விதிவழிவந்த இவ்வொருமைப் பாடு என்றுவது நீங்கமுடியுமா? இதனை நீக்குதல் எவருக்கும் அரியதாகும்.

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே." (குறு-சO)

என விதிவழியேதான் காதல் வாழ்வு ஏற்படுகின்ற' தென்பதனை செம்புலப் பெயனீரார் என்ற அறிஞர் கூறுவாராயினர்.

"பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயிற்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ." (ருகூகூ)

எனக் கூறும் குறுந்தொகைச் செய்யுட் பகுதியும் விதிவழியே காதலர் ஒன்றுபடுவர் என்பதனையே கூறிநிற்பதைக் காண் கிறோம்.

அன்பு நிலைப்பட்டு முன்பு கொண்ட தொடர்பின்வழி ஒன்றுபட்ட காதலர்கள் தங்கள் ஒருமைவாழ்வு அப்பிறவியில் மாத்திரம் நிறைவுடையதாக அமைந்தாற் போதுமென்று எண் ணினார்களா? வரும் பிறவிதோறும் தொடர்பு நீங்காது இணைந்து வாழவேண்டு மென்ற ஆவல் மிகுந்தவராகவே வாழ்ந்தன ரென்ப தனையே "நங்கேண்மை மறுமுறையானுமியைக" என்ற பரி பாடற் பகுதியும் விளக்கிநிற்கின்றது. காதலனுடன் இன்ப வாழ்வு கண்ட காதலி 'இப்பிறப்பு நீங்கி மறுபிறப்பு எய்துவோ மானும் தலைவா! அப்பிறவியிலும் நீயே என் கணவனாக வேண்டும். யானே உன் மனம் விரும்பும் மனைவியாதல் வேண்டும்' எனத் தலைவனுக்குத் தன் உள்ளத்தெழுந்த விருப் பத்தை எடுத்துக் கூறுவதை,

"......... ......... மாநீர்ச் சேர்ப்ப
இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே." (குறு. சக)

என்ற செய்யுளானது எடுத்துக்காட்டி நிற்கின்றது.

காதலி இப்பிறப்புடன் தன் காதல்வாழ்வு நீங்கிவிடுவதை விரும்பினாளல்லள். எப்பிறப்பினும் தொடர்ந்து வரவேண்டு மெனவே விரும்பினாள். அதனால் தலைவன் 'யான் உன்னை விட்டு இப்பிறப்பிலே ஒருபொழுதும் பிரியேன்' என்று கூறியதும், அதுகேட்ட தலைவி மறுபிறப்பிற் பிரிவதை விரும்பித்தானே இவ்விதம் கூறினான் என எண்ணி மனங் குலைந்து அழுகின்றாள்.

" இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனக்
கண்ணிறை நீர்கொண் டனள்." (௧௬௩)

எனக் குறளாசிரியர் கூறும் இப் பாடல் பிறவிதோறும் தொடர்ந்து வாழவேண்டுமென்ற பெருவிருப்பத்தை ஏற்படுத்தி மாட்சியுறுவது காதல் வாழ்வொன்றே என்பதனைக் காட்டி நிற்கின்றது.

காதலன் தன் முயற்சி கருதிப் பிரிவானானால் அப்பொழுது அவன் தனிமையில் இயற்கை ஏதுக்களால் துன்பமடைவானே என அது கருதி வருந்தினர் மகளிர் என்பதனையே நாம் சங்கப் பாடல்களிற் பலவிடத்தும் காண்கின்றோம். கணவன் பொருள் தேடப் பிரிந்துசெல்கின்றான். அவன் செல்லும் வழியில் வெயில் வெப்பம் அவனை வருத்தாதிருக்கவேண்டுமென்ற ஆவலால், வெப்பந்தரும் ஞாயிற்றை வணங்கினால் கணவன் துன்பமின்றிச் செல்வானே எனக் கருதினாள் தலைவி,

" துன்னி நங்காதலர் துறந்தேகு மாரிடைக்
கன்மிசை யுருப்பிறக் கனைதுளி சிதறென
இன்னிசை யெழிலியை இரப்பவு மியைவதோ." (கலி. ௧௬)

எனத் தலைவி தன் நெஞ்சொடு கூறும் இப்பாடலே காதலன் மேற் காதலி வைத்துள அன்புநிலையை எமக்கு எடுத்துரைத்து நிற்கின்றது.

காதலர்தம் வாழ்வுநிலை முடிந்தாலும் அன்புநிலை முடிவடைகிறதா? சாவினுமல்லவா அன்புநிலை மாறாது பண்புடைக் காதலர் என்ற உண்மையை நாட்டியுள்ளார்கள் உத்தமிகள். பாண்டியமன்னன் இறந்ததும் அவன் காதல்மனைவி பெருங் கோப்பெண்டு தன்னைத் தடுத்து நிறுத்திய சான்றோரைப் பழித்துத் தன் கணவன் எரியும் நெருப்பிலே தானும் விழுந்து இறக்கின்றாள். கோவலனைக் கள்வனெனக் கொன்றது தவறென உணர்ந்து உயிர்விட்ட பாண்டியனைத் தொடர்ந்து உயிர் போக்குகிறாள் அவன் காதலியாம் பாண்டிமாதேவி. இராவணன் போரில் மாண்டது கண்டு அவன்மேல் விழுந்தரற்றி மாண்டொழிகின்றாள் மண்டோதரியாம் மாதரசி. கணவன் கள்வனல்லன் என்பதனை நிலைநாட்டி அவன்வழித் தானும் செல்கின்றாள் கண்ணகியாம் கற்பணங்கு. இவ் வரலாற்று நிகழ்ச்சிகளே சாவிலும் காதல்வழித் தொடர்ந்துசென்ற தமிழரது காதல் மாட்சியைக் காட்டப் போதியனவாம். தமிழன் காதல்வழி வாழ்ந்த வாழ்வினை நாம் பண்டைய இலக்கியங்கள் அனைத்தினும் பரக்கக் காணலாம்.

(தொடரும்)

# இந்திய மொழிகள் அனைத்தினும் தனிமிகத் தொன்மையானது நற்றமிழே

**குடியரசுத்தலைவர் இராசேந்திரப் பிரசாத் கூறும் பாராட்டு**

28—6—1958-இல் ஐதராபாத் நகரின்கண் "பாரதி தமிழ்ச் சங்கத்தின்" கலாசார விழாவைத் தொடங்கி வைத்துப் பேசும்பொழுது டாக்டர் இராசேந்திரப் பிரசாத் மேற்கண்டவாறு எழிலுறப் பாராட்டினார். அதன் சுருக்கம் வருமாறு: இந்திய மொழிகள் எல்லாவற்றுள்ளும் தமிழே மிகமிகத் தொன்மையானது. பிறமொழிகள் உருவாகி வருகின்ற காலத்திலேயே தமிழ்மொழியின் நடையும் சொற்களும் பெருமைப்படக்கூடிய அளவில் சிறந்து விளங்கி வந்திருக்கின்றன.

இந்தோ—ஆரிய மொழிகள் உட்படப் பிறமொழிகள் யாவும் வெறும் பேச்சுவழக்கில் மட்டுமிருந்து முழுவளர்ச்சி யடைவதற்கு முன்பே தமிழ் மொழி சொல்வளம் பெற்று விளங்கிவந்திருக்கிறது. முன்பென்பது, ஒரு துளசிதாசு, ஒரு சைதன்னியர் தோன்றி, அம்மொழிகளை வளம் படுத்துவதற்கு முன்பென்பதாம். இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் தென்னிந்திய மக்களின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் தமிழ் மொழியே தனிப்பெருங் காரணமாகவிருந்திருக்கிறது.

பல்வேறு மொழிகளிடையே நெருங்கிய தொடர்பு கொள்ளுதல் வேண்டும். நம்முடைய கல்வித் திட்டத்தை விரிவுபடுத்தி மாநிலங்களுக்கிடையே உள்ள உறவை வளர்த்துக்கொள்ளும்பொழுது தென்னிந்திய மொழிகளை வடஇந்தியர்கள் மிகுதியாகப் பயின்றுவருவார்களென நம்புகிறேன். உரிமை மக்களாக இன்று நாட்டை உருவாக்கும் பெரும் பணியில் நாம் ஈடுபட்டிருக்கிறோம். இப்பொழுது பல்வேறு மொழி களுக்கிடையிலும் உள்ள தொடர்பு மிகுதிப்பட்டு வருகிறது. ஒவ்வொரு மொழியும் நாட்டின் ஒவ்வொரு பகுதியின்கண்ணும் வழங்கப்பட்டு வருகின்ற நன்னாளை ஆவலுடன் எதிர்பார்க்கின்றேன்.

மொழிச் சிக்கல்களால் அவ்வப்போது கருத்து வேறுபடுதலை யான் அறிவேன். நாட்டில் பேசப்படுகின்ற ஒவ்வொரு நாட்டு மொழியையும் வளர்க்கவேண்டியது மிகவும் இன்றியமையாதவொன்றென்பதை ஒருவராலும் மறுக்கமுடியாது. இம்மொழிகளைப் புறக்கணித்தால் உண்மையின் நாட்டின் ஒற்றுமைதான் சீர்குலையும்.

பாரதி சங்கம் ஏற்பாடு செய்திருந்ததுபோன்ற சில விழாக்களில் நான் கலந்துகொண்டிருக்கின்றேன். இத்தகைய வாய்ப்புக்களை நான் மிகவும் முதன்மையாகக் கருதுகின்றேன். ஏனெனில், தமிழ்மொழியினையும் அதன் சிறந்த இலக்கியங்களையும் அறிந்துகொள்ளுவதற்குத் தக்க வாய்ப்பு ஏற்படுகின்றதனாலென்க.

பாரதியார் நாட்டிற்குத் தொண்டு செய்யுமாறு பல்வேறு வழிகளானும் மக்களைத் தட்டிஎழுப்பித் தூண்டியுள்ளார். அவர்தம் பாட்டுக்கள் சிறந்தவெனப் பலரானும் பாராட்டப்படுகின்றது. அவர்தம் கட்டுரைகளில் நாட்டுப்பற்று மிளிர்கின்றது. இந்நிலையத்திற்குப் பாரதியாரின் பெயரிட்டிருப்பதற்காகத் தமிழ்மக்களைப் பாராட்டுகின்றேன். பாரதி சங்கத்திற்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன் என்பதாம்.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

### (க) ஆங்கிலத்தின் தேவைபற்றி டாக்டர். பி. சுப்பராயன் கருத்துரை

"நம் நாட்டை ஒன்றுபடுத்திய மொழி ஆங்கிலம்தான். ஆகவே, வருங்காலத்தில் அந்த மொழிக்குத்தான் முதன்மை கொடுத்தல் வேண்டும். தொழில் நுட்பம் அறிவியல் ஆகியவற்றுக்கு ஆங்கிலத்தைத் தான் நாம் முழு அளவில் பயன்படுத்தவேண்டும். அறிவின் தலைவாசலாக இருப்பது ஆங்கிலம்தான். நம்மை அடக்கி ஆண்டவர்களின் மொழி அது என்று கூறிக்கொண்டு ஆங்கிலத்தை அகற்றிவிடுவதற்குச் சிலர் முயன்று வருகிறார்கள். அவர்களுடைய போக்கு மிகவும் கண்டிக்கத் தக்கதாகும். இந்திமொழியை வலுக்கட்டாயமாகத் திணித்தால் நாட்டு ஒற்றுமை சீர்குலையும்" என்று 30-6-58-இல் கோவையில் அவிநாசிலிங்கம் இல்லக் கலைக்கல்லூரியில் பி. ஏ., பி. எஸ். சி. வகுப்புக்கள் தொடக்க விழாவிற்குத் தலைமை தாங்கிய டாக்டர். பி. சுப்பராயன், எம். பி. அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

**குறிப்பு:** ஆங்கிலத்தின் இன்றியமையாமை பற்றியும், இந்தி கட்டாயமாகத் திணிக்கப்படுதல் கூடாதென்றும் டாக்டர் அவர்கள் பலமுறை வலியுறுத்திக் கூறியுள்ளார்கள். டாக்டர் அவர்களின் அறிவுரைகள் ஆட்சியாளர்க்கு நல்ல மருந்தாகி, மொழியைப்பற்றிய அளவில் நல்ல தெளிவை உண்டுபண்ணும் என்று நம்புவதோடு இங்ஙனம் அறிஞர்கள் அடுத்தடுத்துத் தரும் அறிவுரைகளைப் புறக்கணித்து வந்தால் ஆட்சிமுறை சீர்கெடும் என்பதையும் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

### (உ) இந்தித் திணிப்பால் வரும் கேடுபற்றி ஆச்சாரியார் கருத்து

22-6-58-இல் மாயூரத்தில் நடைபெற்ற தமிழ்நாடு இளைஞர் கழக மாநாட்டில் பேசியகாலை திரு. சி. இராசகோபாலாச்சாரியார் அவர்கள், "ஆங்கிலம் நீண்டகாலமாக இந்நாட்டில் வழங்கி வருகிறது. ஆங்கிலேயரின் கண்டுபிடிப்புக்கள் பலவற்றையும் பயன்படுத்திவரும் நாம் ஆங்கிலத்தைமட்டும் வெறுப்பது பொருளற்ற செயல். அதைவிடுத்து வேறொரு புதுமொழியை ஏற்றுக்கொள்ளுவது கடினம். இதனால் வடக்கிற்கும் தெற்கிற்குமிடையே மனக்கசப்பும் பூசலும் எழும். அது வலுத்தால் அதனை அடக்கியாள்வது மிகக் கடினமாய் விடும். இந்தி நன்கு வளர்ச்சியடையாத மொழி. அதனை விரும்பாதவர்கள் மீது வலிந்து புகுத்துதல் மக்களாட்சிப் பண்பாகாது."—என்று பேசியுள்ளார்.

**குறிப்பு:** ஆச்சாரியார் அவர்கள் குறிப்பிட்டுள்ளபடி இந்தி கட்டாயமாகத் திணிக்கப்படுவதால் வடநாட்டுக்கும் தென்னாட்டுக்கும் பகைமை வளர்கிறது என்பது உண்மை. வேறு எதைப் பொருட்படுத்தாவிடினும் இப்பகைமை உணர்ச்சியைப் பொருட்படுத்தியேனும் மைய அரசியலார் விட்டுக் கொடுப்பார்களாயின் நாடு நலம்பெறும்.

### (௩) இந்திய ஆட்சிமொழிபற்றித் திரு. இரத்தினசாமி கருத்து

மாயூரம் இளைஞர் மாநாட்டில் பேசிய திரு. எம். இரத்தினசாமி அவர்கள் "இந்தி ஆட்சிமொழியானால் விளையும் கேடுகள்பற்றி இதுகாறும் எத்தனையோ விளக்கங்கள் தரப்பட்டுவிட்டன. ஆயினும் ஒன்றுக்கும் இதுகாறும் தக்க பதில் தரப்படவில்லை. ஆங்கிலம் தேசிய மொழியாக இருக்கவேண்டும் என்று நாம் கூறவில்லை. ஆட்சிமொழியாகத்தான் இருக்கவேண்டுமென்கிறோம். ஆட்சிமொழி வேறு; தேசிய மொழி வேறு. இந்திமொழி பயிலப்படுவது ஒருபுறமிருப்பினும் ஆட்சிமுறைக்கு ஆங்கிலமே ஏற்றது. சுவிட்சர்லாந்து போன்ற நாடுகளில் நான்கு மொழிகள் ஆட்சிமொழியாகவும், நான்கு மொழிகள் தேசிய மொழியாகவும் கொள்ளப்பட்டிருக்கின்றன. இந்தியாவில் இந்தியைவிடத் தென்னிந்திய மொழிகள் பல வளமுடையனவாக உள்ளன. அவைகளைத் தேசிய மொழியாக வைத்துக்கொள்ளலாம்."—என்று பேசியுள்ளார்.

**குறிப்பு:** *திரு இரத்தினசாமியவர்கள் சிறந்த அரசியல் அறிஞர். ஆட்சிமொழிபற்றி அவர்கள் தரும் கருத்துக்களை ஆட்சியாளர் கருத்தில் கொண்டு ஆவன செய்வார்களாயின் ஆட்சி நலம்பெறும்; நாடு வளம் பெறும்.*

### (௪) ஆங்கிலம் நீடித்துப் பயிலப்படுவதன் அவசியம்பற்றி டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் கருத்து

கடந்த 30-6-58-இல் பெங்களூர் ரோட்டரி கிளப்பில் பேசிய டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர் அவர்கள் ஆங்கிலத்தின் இன்றியமையாமை குறித்துப் பின்வருமாறு பேசியுள்ளார்:

"ஆங்கிலத்தைப் பயன்படுத்துவதன் மூலமே இந்தியா மற்ற நாடுகளுக்குச் சமமான மதிப்பைப்பெற்று அதனை நீடித்துக் காப்பாற்றிக் கொள்ளமுடியும். இந்தி ஆங்கிலத்தை அகற்றும் அளவுக்கு வளர்ந்தாலொழிய அதனைப் பயன்படுத்த இயலாது. ஆங்கிலம் தாய்மொழியுடன் தொடர்ந்து ஒரு பாடமாகக் கற்பிக்கப்படவேண்டும். உலக மக்கள் தொகையில் பத்தில் ஒரு பங்கினர் ஆங்கிலம் பேசுகின்றனர். பெரிய அறிவியல் கண்டுபிடிப்புகள் அனைத்தும் குறிப்பிட்ட சில ஆங்கில இதழ்களில்தான் வெளியிடப்படுகின்றன. உலக அஞ்சல்களில் முக்காற்பகுதி ஆங்கிலத்தில் எழுதப்படுகிறது. உலக வானொலி நிலையங்களில் ஐந்தில் மூன்று பங்கு ஆங்கிலத்தையே முதன்மையாகப் பயன்படுத்துகின்றன. இந்திமொழி 150 ஆண்டுகளுக்குள் ஏற்பட்ட மொழியேயாகும். இந்நாட்டில் ஒரு பகுதியில் பேசப்படும் இந்தி மற்றொரு பகுதியினர்க்குப் புரியும் என்று சொல்வதற்கில்லை. இந்தியைவிட இலக்கியச் செறிவுடைய இந்தியமொழிகள் பல இருக்கின்றன."—இவ்வாறு பேசியுள்ளார்.

**குறிப்பு:** *திரு. சி. பி. இராமசாமி ஐயரவர்கள் மொழித் துறையிலும் அரசியலிலும் சிறந்த அறிவுபெற்றவர்கள். இத்தகைய மூதறிஞர்களின் அறிவுரையைக் கேட்ட பின்னரேனும் அரசியலார் இந்தி வெறியைக் கைவிடுவார்கள் என எதிர்பார்க்கிறோம்.*

---

# மதிப்புரை

**“பயங்கர இரவுகள்”**

[ஆக்கியோன், அழகை பி. நீலகண்டன் அவர்கள். விலை ரூபா. 1—12—0. கிடைக்குமிடம் பாண்டியன் பதிப்பகம், திருநெல்வேலி நகர்.]

இஃதோர் அழகிய புனைகதையாகும். இதன்கண் இந்நாள் வாழும் மக்கள் நிலைமையினையும், நாட்டின் நிலைமையினையும், வறுமையின் கொடுமை, செல்வரின் போக்கு, பிறர்க்கென வாழும் பெற்றி, காதல், கடமை, நன்றியுணர்வு முதலிய உயர்ந்த கோட்பாடுகள் முதலிய பிறவும் நன்கு வரையப்பட்டுள்ளன. மக்கள் மனத்தினை முற்போக்குக்கு எளிதின் ஈர்க்கும் ஆற்றல் புனைகதைகளுக்கும், நாடகங்களுக்கும் உள்ளன. இவற்றின் வாயிலாகச் செந்தமிழ் மேன்மையினையும், சீரிய கொள்கைகளையும் இனிமையுறப் பரப்புவது எளிதாகும். அவ்வகையில் இந்நூல் தலைசிறந்து நிற்கின்றது. நாட்டு நலம் விழையும் நல்லோர்கள் இதனை வாங்கி ஆசிரியரை மேலும் இத்துறையில் ஊக்குவார்களாக.

**“காமன் மகள்”**

[ஆசிரியன் ஜமதக்னி அவர்கள். விலை ரூபா. 2—50. சாந்திநிலைய வெளியீடு, 9. சேணியம்மன் கோவில் தெரு, சென்னை-21.]

இதன் ஆசிரியர் சிறந்த தமிழ்ப்பற்றும் தமிழ்நாட்டுப்பற்றும் மிக்குள்ளவர். காந்தியடிகள் இயக்கத்தில் எழுவாய் இறுவாயாகக் கலந்துகொண்டு வழுவில் தொண்டாற்றிய விழுத்தொண்டராவர். தமிழ்மொழி ஆங்கிலம் வடமொழி இந்தி என்ற நான்மொழிப் புலவர். இந்திமொழியின் பெரும்புலவரான திரு, சயசங்கரபிரசாத் அவர்கள் ஆக்கிய காமாயனி என்னும் சிறந்த நூலின் மொழிபெயர்ப்பாகப் பிறந்த நூலாகும் இது. உரைநடைகளே மிக்குப் பயிலும் இந்நாளில் செய்யுள் நடைக்காப்பியம் தோன்றுவதென்றால் பன்மீனுப்பண் ஒப்பில்பானிலாச் செப்பமுறத் தோன்றுவதொக்கும்.

இந் நூலின்கண் உயிரியல் உள்ளடங்கிய உலகியல் மேலோங்கி நிற்பதாகிய புறத்திணையும், உலகியல் உள்ளடங்கி உயிரியல் மேலோங்கி நிற்பதாகிய அகத்திணையும் விரவிவந்துள்ளன. இதன்கண் உலகத் தோற்றம், அறிவியல் பகுதிகள், அன்பு, அருள், காதல், இன்பு, கடவுள் நினைவு, பண்பாடு, வாழ்க்கைகள் விளக்கப்பட்டுள்ளன.

செய்யுள்கள் இடத்துக்கு வேண்டிய வண்ணவேறுபாடுகளுடன் திகழ்கின்றன. பலவகை யாப்புக்களும் பயின்று வருகின்றன. எளிய இனிய நடை; ஆற்றொழுக்குப் போன்ற ஓசைநயம்; பொருட்செறிவும் திட்பநுட்பமும் சிறந்தன. நம் அருமைத் தமிழ்த்தாய்க்குப் புதுப்பணி குயிற்றிய தலைசிறந்த புலவர் பெருமக்களுள் இவரும் ஒருவராவர். இதனைச் செந்தமிழ்ப் பெருமக்களும் ஆசிரிய மாணவர்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் பயனெய்துவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.